உ

# ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த குரு சுவாமிகள்




## வரலாறும் - உபதேசங்களும்

அத்மனெணி அசை சங்கிளி

12.2.95

# முகவுரை

நூல் வெளியீட்டு ஜமா.

வழங்கியவர் :

**அமலன் அடிகள் என்ற அய்யாக்கண்ணு-**
**பெருமாள் பட்டி, வாடிப்பட்டி வட்டம்**
**மதுரை மாவட்டம்.**

52/4

மானிடர் உள்ளத்தில் குடிகொண்டிருக்கின்ற ஞானம், அஞ்ஞானம் இவ்விரண்டினுள், அஞ்ஞானத்தை ஒழித்து ஞானத்தை விருத்தி செய்து, அதன் மூலமாக, நித்தியானந்த சுகத்தை அடைய வேண்டியுள்ளது.

நம்மவர்களுள் எத்தனையோ பேர் அவ்வழிச் செல்லினும் தற்போது சேதுபதிதேசமான இராமநாதபுரம் மாவட்டம், மானா மதுரை வட்டம், பாத்திபனூருக்கு, மேற்கில் 4 கல் தொலைவில், புத்தூர் என்ற சிறு கிராமத்தில் ஆறுமுகம், முத்துதேவி தம்பதியர்களுக்கு மூன்றாவது குமாரனாகப் பிறந்து, மதுரை மாவட்டம், வாடிப்பட்டி வட்டம், குலசேகன் கோட்டை கிராமம், ஸ்ரீ பாலதண்டாயுதபாணி சந்நிதி விளங்க நின்ற இடத்தின் தென்மேற்கில் 2கல் தொலைவில் அமைந்துள்ள ச. பெருமாள் பட்டி என்ற ஊரில் மடாலயம் நிறுவி,

பேசப்பேச பிழைவரும் ஆதலால் எனது ஆயுள் பரியந்தம் வாய்பேசுவதில்லை என்றும், பணம் பாஷாணத்துக்கு சமமானது என்பதால், பணம் காசுகளை எனது கையால் தொடுவதில்லை என்றும், அரும்பசியே ஏற்பட்டாலும் எனது கையால் ஆகாரத்தை எடுத்து புசிக்க மாட்டேன் என்றும் 3 பிரதிக்ஞைகளை செய்து 18 ஆண்டு காலம் மூன்று பிரதிக்ஞைகளை நிறைவேற்றி நித்தியானந்தத்தை அடைந்த **ஸ்ரீலஸ்ரீ புத்தூர் மௌன குருசுவாமிகள்** முன்னின்று பெருமை சேர்த்த படியால் மேற்படி சுவாமிகள் பந்த பாசமொழித்து, சாலோக, சாமீப, சாரூப, சாயுக்ஷ்யம் என்ற நான்கு பதவிகளில் மேன்மையான, சாயுக்ஷ்,,பதவியடைய ஸ்ரீ அகண்ட பரிபூரண சத்சித் ஆனந்த பரப்ரம சொரூபியாயிருக்கின்ற பெருமைக்குரிய பராபரக் கடவுள் அருள்புரிவாராக.

சுபம்! சுபம்! சுபம்!!!

# அணிந்துரைப் பாமாலை

குருதாதன் மடம் காத்து
குருவாகி மார்கழியில் விரதமோடு
மருவி நின்ற அய்யாக்கண்ணனோடு
குருநாதன் மலரடியை நத்துரவமே !

திருமகனாம் அமரர் இந்த
திருமடத்தின் தந்தை புத்தூரரார்
ஒருவரோ இங்கிருந்து பக்தியாய்
ஒருமுகத்தில் நிறையானார் நின்று !

ஆறுமுகமாய் முருகனவன் எங்கும்
உலகாண்ட பெருமகனின் பேயராகி
நேர்முகத்தில் குன்றம் நின்றாடி
நிறைவான காட்சி தந்தோன்
ஆறுமுகம் எனும் பேரன் நாடோரும்
அறுதியிட்டு விழாவெடுப்பான்
பேருடைய அமலன் அவரூரில்
பெருமைசேர் மடாலயம் தந்தோனே !

சீராளர் செம்மை சேர்த்த
சேர்வை மகன் வந்திங்கே
ஓராளும் செயல் முடித்து
ஒதுங்கி நின்ற குருவே !

காராளன் கார்மேகன் திருவுருவில்
கார்த்திட்டான் பெருமாள்பட்டிதனை
யாராலும் செயற்கரிய செயலான்
அவனே மடத்துடைய மகுடாதிபதியே !

கவிஞர். மா மருதுபாண்டியன்
வாடிப்பட்டி (பெருமாள் கோவில் வீதி)
வாடிப்பட்டி வட்டம்
மதுரை மாவட்டம்.




# முன்னுரை

ஓம் குரூர் பிரம்மா குரூர் விஷ்ணு குரூர் தேவோ மஹேஸ்வரா
குரூர் சாட்சாத் பரப்பிரம்மம் தஸ்மைஸ்ரீ குருவே நமஹ !

பூர்வஜென்ம வாசனையின் பயனாக அடியேனுக்கு பல தொடர்புகள் இப்பிறவியில் கிட்டி வருகின்றன. சாதுக்களும், ஞானிகளும் எந்நிலையிலும் இருப்பார்கள். எந்த ஆஸ்ரமத்திலும் இருப்பார்கள் அவர்களது தொடர்புகள் எவ்வகையிலேனும் தொடந்து வந்து கொண்டேயிருக்கும்.

அடியேன் மகான்களைத் தரிசிப்பதிலும், அவர்களைப் பற்றி உரையாடுவதிலும் மிகவும் ஆர்வமுடையவன். என்னாலான இறைப் பணிகளை இயன்றவரை செய்து வருகின்றேன். இதனால் என்னைப் பற்றி அறிந்த திருவாளர் ரா. சிவஞானம்பிள்ளை அவர்கள் எனக்கு அறிமுகமானார்.

காட்சிக்கு எளியவர், கருத்து நிறைந்தவர், அவரோடு உரையாடுகின்ற பொழுதுதான் அவரது மேன்மையான குணங்களை அறிந்தேன். அப்பொழுதுதான் அவர் 'ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த குரு' சுவாமிகளைப் பற்றி எடுத்துரைத்தார்கள். அச்செய்திகள் என்னை மிகவும் பரவசப்படுத்தின.

இதன் விளைவாய் சுவாமிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் ஒரு வரலாற்றுப் பெட்டகம் போல் பாதுகாக்க 'நூல்' வடிவில் வந்தால் நலமாயிருக்கும் என்ற எண்ணம் ஏற்பட்டது. உடனே செயல்பட குருநாதன் திருவருள் பாவித்தார். ஆன்மீக அன்பர் பெருமாள் பட்டி திரு. அமலன் அடிகள் அவர்கள் ஏற்கெனவே சுவாமிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தொகுத்து வைத்திருந்தார். அவைகள் என் பார்வைக்கு வந்தது. அடியேனும் விருப்பமுடன் அதைப்படித்து முடித்ததும், உடன் பெருமாள்பட்டி சென்று சுவாமிகள் அடங்கிய திருவிடத்தைத் தரிசித்து வரவேண்டுமென்ற எண்ணம் உதித்தது.

திருவாளர் சிவஞானம் பிள்ளை அவர்கள் எம்மை அன்போடு அழைத்துச் சென்று பெருமாள் பட்டியில் சுவாமிகளின் சமாதி ஆலயத்தைக் காட்டினார். அங்கு நிலவிய தெய்வீக ஒளியில் அடியேன் மனமுருகி நின்றேன். தற்போதய பூசாரி திருவாளர் ஆறுமுகசாமி அவர்களும் அவரது மகன் பிச்சைமுத்து அவர்களும் நித்திய பூஜைகளை

தவறாமல் செய்து சுவாமிகளின் திருவருளுக்குப் பிரியமாக இருந்து வந்ததைக் கண்டோம். சுவாமிகளின் திருமடம் முழுவதையும் சுற்றிப் பார்த்தோம். அவர்கள் உபயோகப்படுத்திய பொருட்களையும் தரிசித்தோம். சுவாமிகள் தங்கியிருந்து தவம் இருந்த கற்றாழைப் புதர் நிறைந்த இடம், ஆலயம், அய்யனார் கோவில் முதலானவற்றைப் பார்த்தோம்.

ஊர்வந்து சேர்ந்ததும் உடன் 'நூல்' அச்சிடுவதற்கான வேலைகளை ஆரம்பித்து, செய்திகளை முறைப்படுத்தி, தொகுத்து அச்சிடக் கொடுத்தோம். ஸ்ரீ அரவிந்த அன்னையின் அன்பில் நிறைந்து வாழும் நண்பர், திரு. பாஸ்கர் அவர்கள் தமது சத்தியஜோதி பிரிண்டர்ஸ் நிறுவனத்தின் வழியாக இந்நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்தார்.

சுவாமிகள் வாழ்க்கை நிகழ்ச்சிகள் நூல் வடிவில் இப்பொழுது தங்கள் பார்வையில் உள்ளது. படியுங்கள், கவனமுடன், நிதானமாக, ஆழ்ந்து படியுங்கள்.

அதன்பின் சுவாமிகளின் 'திருவருளையும்' 'திருக்காட்சியையும்' மனதில் எண்ணி தியானியுங்கள் ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த குருநாதர் உங்களுக்கு எல்லாவிதமான நன்மைகளையும் தருவார்.

எமது அன்பிற்கினியவர்களே! நல்ல நூல்களைப் படியுங்கள். நல்ல செய்திகளைப் பேசுங்கள். நல்ல உள்ளங்களுடன் உரையாடுங்கள். சான்றோர்களின் தத்துவ, வேத, ஆன்மீகச் சிந்தனைகளைச் சிந்தியுங்கள். இறை உணர்வுடன் இருங்கள். இல்லங்கள் கோயிலாகட்டும். குடும்ப உறுப்பினர்கள் தெய்வீகமானவர்களாகத் திகழுங்கள். தயை, தாட்சண்யம், நேர்மை, பணிவு, கனிவு, இவைகள் உங்களின் கொள்கைகளாகட்டும். உணவுக்காக மட்டும் வாழாது சிறந்த உணர்வுக்காகவும் வாழப்பழகுங்கள்.

வாழ்க்கை வளமாகும். வாழ்வும் நிறையாகும்.

வாழ்க ! வளர்க !

அன்புடன்

**ஆத்மஞானி சாது சங்கிலி**

**ஆனந்தாஸ்ரமம்.**

மானா மதுரை

உ

சிவமயம்

# என் அனுபவம்



ஆங்கிலேயர் ஆண்டு வந்த காலத்தில் பெருமாள் பட்டி மிகமிக பின்தங்கிய கிராமம். அது சமயம் தான் சுவாமிகள் பெருமாள் பட்டிக்கு எழுந்தருளி, மடம், நந்தவனம் ஏற்படுத்தி இருந்தார்கள். ஜனங்களும் கல்வி அறிவு இன்றி கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற நிலையிலிருந்தார்கள்.

பிரமலேக் கள்ளர்களுக்காக தனிச்சட்டம் ஏற்படுத்தி அவர்களை நல்வழிக்குக் கொண்டு வருவதற்காக பெருமாள்பட்டியிலும், பள்ளிக் கூடம் ஒன்றை ஏற்படுத்தி நடந்து கொண்டிருந்தது. அவர்களைக் கண்காணிப்பதற்காக போலீஸார் அடிக்கடி வந்து, அவர்களை பள்ளிக் கூடத்துக்கு அழைத்து வரச்சொல்லி வேறு எங்காவது திருட்டு நடந்திருந்தால், அதற்கு முதல் நாள் இரவு அவர்களில் யாராவது ஊரில் தங்கி இராமல், வெளியூர் சென்றிருந்தாலும், அவர்களை அடித்து துன்புறுத்துவது வழக்கம். அது பொறுக்கமுடியாமல் கள்ளர் இன பிரமுகர் ஒருவர், கல்வி அதிகாரிகளிடம் முறையிட்டு, பள்ளிக்கூடம் இருப்பதால் பிள்ளைகள் ஆடுமாடு மேய்க்காமல் கெட்டுவிடுகிறார்கள். ஆகவே எங்களுக்கு பள்ளிக் கூடம் வேண்டாம் எடுத்து விடுங்கள் என்று வற்புறுத்தி பள்ளியை நிறுத்தி விட்டார்கள்.

பிறகு என் பெரிய தகப்பனர் கருப்பையா பிள்ளை முயற்சியால் என் அத்தை புருஷன் வெள்ளிமலேப் பிள்ளை என்பவரை வைத்து ஏட்டுப் பள்ளிக்கூடம் நடந்து வந்தது. அதில் நாங்கள் படித்து வந்தோம். பிள்ளைகளுக்கு பக்தியைப்பற்றி பள்ளியில் முக்கியத்துவம் கொடுத்து பாடம் நடத்துவார். தினமும் பள்ளிப்பிள்ளைகள் மடத்துக்குச் சென்று தேவாரம் திருவாசகம் முதலிய பக்திப் பாடல்களைப் படித்து வருவது வழக்கம். அதுசமயம் எனக்கு 8 வயது தான் இருக்கும். வீட்டில் பெரியவர்கள் யாரும் இல்லாத சமயம், என் தாயார் சுவாமிகளுக்கு உணவு அளித்து வரச் சொல்லி என்னிடம் உணவு கொடுத்து அனுப்புவார்கள். சுவாமிகள் பணம் காசையோ, உணவையோ கையால் தொடுவதில்லே என்ற வைராக்கியம் பூண்டிருந்தார்கள். ஆகவே உணவில் நெய்விட்டு பிசைந்து, அங்கு இருந்த வெள்ளைப்பூனைக்கு சிறிது உணவு வைத்துவிட்டு, சுவாமிகளுக்கு உணவை ஊட்டி விட்டு வாயைக் கழுவி துடைத்து சுத்தம் செய்து விட்டு வருவது வழக்கம்.

சுவாமிகள் ஆசிரமத்தின் உள் சென்று கதவை சாத்திக் கொண்டு நிஷ்டையில் அமர்ந்து கொண்டால் எத்தனை நாட்கள் ஆனாலும், உணவுக்காகவோ, வேறு எதற்காகவுமோ தொந்தரவு கொடுப்பது கூடாது. அவர்களாகவே வெளியில் வரும் சமயம் தான் உணவளிக்க வேண்டும்.

வெள்ளிமலைப் பிள்ளை காலமான பின்பு சிறிது காலம் பள்ளிக் கூடம் இல்லாதிருந்தது இளைஞர்களாக சேர்ந்து 'பாரத மாதா வாலிபர் சங்கம்' என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தி நடத்தி வரும் சமயம், வைத்தியநாத ஐயர் என்னும் நாகபட்டிணத்துக் காரர் ஒருவர் வந்து சேர்ந்தார். மந்தையில் ஓர் சாவடியை ஏற்படுத்தி ஷை வைத்திய நாத ஐயரை வைத்து பிள்ளைகளுக்கு கல்வி கற்பிக்கச் செய்திருந்தோம்.

அவரின் தீவிர முயற்சியாலும் ஊர் மக்கள் ஒத்துழைப்பாலும் மேற்படி பள்ளிக்கு சர்க்கார் அங்கீகாரம் பெறப்பட்டு பள்ளி நடை பெற்று வருகிறது. பெருமாள் பட்டி மக்களும், சுவாமிகளின் ஆசியால் கல்வி அறிவிலும், பொருளாதாரத்திலும் மேம்பட்டு விளங்குகிறார்கள்.

பஜனைமடத்துக்காக, ஒரு காளைமாடு நேர்ந்துவிட்டிருப்பார்கள் அது எந்த தோட்டத்தில் போய் மேய்ந்தாலும் யாரும் அடித்து விரட்ட மாட்டார்கள். ஒரு இடத்திலேயே நின்று மேயாமல் ஒவ்வொரு தோட்டத்திலும் சிறிது சிறிது மேய்ந்து விட்டு சென்று விடும். நன்கு கொழுத்து சுறுசுறுப்பாக இருக்கும். யாரும் அதை அடக்கமுடியாது. தைமாதத்தில் வெளியூர்களில் நடக்கும் ஜல்லி கட்டுக்காக அந்த மாட்டையும் கொண்டு செல்வது வழக்கம். அதுசமயம் வேலு சேர்வை, பிச்சை சேர்வை ஆகியவர்கள் தலைமையில் 40, 50, பேர் விரட்டிப் பிடித்து வந்தாலும், திமிறிக் கொண்டிருக்கும். அப்படிப் பிடித்து வரும் மாட்டை, மடத்தின் நுழைவாயிலில் நிறுத்தி சுவாமிகள் இருக்குமிடம் அழைத்துப் போய் விபூதியிடச் சொல்லிபின் அழைத்துச் செல்வது வழக்கம். அதுசமயம் மடத்தின் நுழை வாயிலிலிருந்து சுவாமிகளிடம் போய் வருவது வரை சாதுவாக சென்று வெளியானவுடன், நான் கைந்து பேர் பிடித்தால்தான் ஓரளவு அடங்கி வரும். ஞானிகளிடம் ஐந்தறிவுள்ள பிராணிகளும் அடங்கி நடக்கின்றன என்பதைச் சுட்டிக் காட்டவே இதை விளக்கினேன்.

வியாதியினாலோ அல்லது தேள், பாம்பு முதலிய விஷ ஜந்துக்கள் கடியினாலோ, அலரி அழுது கொண்டு சுவாமிகளிடம்

வருபவர்கள், சுவாமிகள் கொடுக்கும் விபூதியை பூசிக் கொண்டு சுகமாக திரும்புவார்கள். சுவாமிகள் ஜீவ சமாதி ஆன பின்பும் தன் நியாயமான வேண்டுகோளை, மனமுருகி வேண்டிக்கொண்டு சமாதியை வலம் வந்து சென்றால் நிச்சயமாக நிறை வேறியிருக்கிறது. இன்றும் நிறைவேறிக் கொண்டிருக்கிறது. சுவாமிகளின் ஜீவிய காலத்தில் நடந்த பல அற்புதங்களை கேள்விபட்டிருக்கிறேன். நான் அனுப வித்தவைகிளை மட்டுமே இங்கு கூறியுள்ளேன்.

நான் மலேசியா, சிங்கப்பூர், போர்ணியோ சிலோன் ஆகிய நாடுகளுக்கு சென்றிருந்த காலங்களில், சில இக்கட்டான நேரங்களில் 'குருநாதா' என்று நினைத்தால் சுலபமாக காரியங்கள் நிறை-வேறியிருக்கிறது.

நாம் பெற்ற இன்பம் நாட்டு மக்கள் அனைவரும் பெற வேண்டுமென்ற நோக்கத்தில், சுவாமிகளின் கீர்த்தி குடத்திலிட்ட விளக்காக இருக்கக் கூடாது. வெளியுலகுக்கும் தெரிய வேண்டுமென்ற நோக்கத்தில், அமலன் அடிகள் (அய்யாக்கண்ணு) அரும்பாடுபட்டு சேகரித்து வைத்திருந்த சுவாமிகளின் சுய சரிதத்தை, நூல் வடிவாக கொண்டுவர வேணுமென்று, அமலனடிகளிடம் கூறிய பொழுது சம்மதித்து அவரும் மற்ற அன்பர்களும் வேண்டிய உதவி செய்தார்கள்.

ஆத்மீகத்தில் மிகப்பற்றுள்ள ஆசிரியர் ஆத்மஞானி சாது சஞ்கிலி **M.A.,** அவர்களிடம் கூறிய பொழுது, சரித்திரத்தை சுருக் கமாக எழுதிக் கொடுத்தார்கள். சத்தியஜோதி பிரிண்டர்ஸ் பாஸ்கரன் அவர்கள் நல்ல விதமாக புத்தகமாக்கித் தந்திருக்கிறார்கள்.

புத்தகம் வெளிவர உதவிய அனைத்து நல்லிதயங்களுக்கும் புத்தக வெளியீட்டு நிதி வசூலிக்க உதவிய பாண்டியராஜபுரம் பள்ளி பாண்டி S/o சந்தனம் சேர்வை அவர்களுக்கும் நன்றியை தெரிவித்து கொள்வதுடன், அவர்களுக்கும் புத்தகத்தைப் படித்து சுவாமிகளிடம் பக்தி சிறத்தையுடனும், ஈடுபாட்டுடனும் உள்ளவர்களுக்கும் ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த சற்குருநாத சுவாமிகளின் அருட்கடாக்ஷியம் என்றும் இருக்கும் என்று உறுதியளிக்கின்றேன்.

ராம. சிவஞானம் பிள்ளை
S/o ராமசாமி பிள்ளை

# விநாயகர் துதி

**ஞாலமதில் புத்தூர் மௌனானந்தர் தன் சரிதை**
**கோலமுடன் செப்பவே கோகுலத்தில் சீலமுடன்**
**வந்துதித்து கஞ்சன்தனை வதைத்திட்டோன் தன்மருகா**
**தந்திமுகா நின் இருதாள் தா.**

நமது பாரத நாட்டை ஞானபூமி என்று சொல்வார்கள். அனாதி காலமாக ஞானியர் பலர் இந்த நாட்டில் தோன்றி தம்முடைய வாழ்வினாலும் வாக்கினாலும் இறைவனை அடையும் நெறியைக் காட்டியிருக்கிறார்கள். இறைவனுடைய அவதாரங்கள் சிற்சில காலங்களில் தான் நிகழும். ஆனால் ஞானிகளோ எல்லாக் காலங்களிலும் தோன்றிக் கொண்டே இருக்கிறார்கள்.

பாரத நாடு சுதந்திர வாழ்வு பெற்றிருந்தாலும் வளம் பெற்று இருந்தாலும், வறுமையுற்றிருந்தாலும் எந்த நிலையிலிருந்தாலும், இந்த நாட்டில் ஞானிகள் தோன்றுவது நிற்கவேயில்லை. முன்பும் தோன்றினர் -கள். இப்போதும் தோன்றியிருக்கிறார்கள். இனியும் தோன்றுவார்கள்.

ஞானிகள் இப்படித்தான் இருப்பார்கள் என்று வரையறுத்துக் கூற முடியாது. எந்த வகுப்பிலும் எந்த ஆஸ்ரமத்திலும் இருக்கலாம். ஆனால் அவர்கள் பெற்ற அனுபூதி அவர்களை மற்றவர்களிடமிருந்து இனம் கண்டு கொள்ளும்படி செய்து விடும். துறவிகளாகவும், இல்லறத்தார்களாகவும், பிரம்மச்சாரிகளாகவும் இருந்த ஞானிகள் உண்டு. துறவிகளில் சடைமுடி தறித்தவர்களாகவும், மௌனிகளாகவும் அவதூதர்களாகவும் எப்போதும் சஞ்சாரம் செய்து கொண்டேயிருப்பவர்களாகவும், இருந்த இடத்திலேயே நிலையாக இருப்பவர்களாகவும், பல வகையில் அவர்கள் இருப்பதைக் காணலாம்.

சடைமுடி தரித்தும் மௌன நிலையிலிருந்தும் ஞானானுபூதி பெற்றவர்களில் **ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த பரம சற்குரு சுவாமிகளும்** ஒருவர் ஆவார்கள். 19 ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாரத கண்டத்தில் நீர்வளம் நிலவளம் பொருந்தியும், ஸ்ரீ இராமபிரான் தன் மனையாளான சீதாபிராட்டியின் பொருட்டு, தன் சேனைகளான ஆஞ்சநேயர், சாம்புவந்தர், முதலானவர்களோடு இலங்காபுரிக்குச் செல்ல சமுத்திரத்தைத் தாண்டுவதற்காக அணை ஸ்தாபித்துத் தங்கியிருந்த சேதுபதி ஆளுகைக்குட்பட்ட இராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த மானாமதுரைக்குச் சமீபமுள்ள பார்த்திபனூரின்

மேற்குதிசையில் மூன்றுகல் தொலைவில் பி.புத்தூர் என்ற அழகிய கிராமம் அமைந்துள்ளது. அந்த ஊரில் இராஜகுல தேவர் வகுப்பில் உதித்த பிரபல விவசாயி ஆறுமுகம் சேர்வை என்ற ஒருவர் இருந்தார். அவரின் அன்பான பத்தினியார் முத்துதேவி அம்மையார். இவ்விருவருக்கும் பிறந்த ஐந்து ஆண் குழந்தைகள், ஐந்து பெண் குழந்தைகளில் மூன்றாவதாக பிறந்தவர் தான் நமது சுவாமிகள். சுவாமிகளுக்கு பூர்வீகப் பெயர் **நாகு.** குழந்தை நாகுவை ஐந்து வயது ஆனவுடன் பள்ளியில் சேர்த்தனர். குழந்தைக்கு பள்ளிப்படிப்பில் நாட்டமில்லை. சிறுவயதிலேயே சாந்தம், தயை. தாக்ஷண்யம், பொறுமை, ஜீவகாருண்யம், ஈகை, இரக்கம் முதலிய குணங்களில் சிறந்து விளங்கினார்.

அவ்வாறு இருக்கும் நாளில், தன்னுயிர் போல பிற உயிர்களைக் காப்பதும், ஏழைகள் மேல் இரக்கம் காட்டுவதும் பசியென்று வந்தவர்களுக்கு உணவளிப்பதுமான தயாள குணங்களைக் கண்டு பெற்றோர்கள் கேவலமாக நினைப்பார்கள். இருப்பினும் குழந்தை நாகு ஞானப் படிப்பில் நாட்டமானார்.

குழந்தை நாகுவிற்கு ஆறு வயது ஆனசமயம், அவர்களின் தோட்டத்தில் விளைந்திருந்த காய்கறிகள், கீரைவகைகள் ஆகியவைகளை யாரும் பறித்து விடாதபடி பார்த்துக் கொள்ள நாகுவை தோட்டத்துக்கு காவலுக்கு அனுப்பியிருந்தார்கள். அப்பொழுது பக்கத்து கிராமத்து ஆள் ஒருவர் வந்து நாகுவிடம் கீரைத்தண்டு கேட்க உனக்கு வேண்டியதை பறித்துக் கொள் என்று சொல்லியவுடன், மேற்படி நபரும் தான் சுமக்க தக்கபடி கீரையைப் பறித்துக் கொண்டு போய் விட்டார். இது விபரம் பெற்றோருக்குத் தெரிந்தவுடன் எங்கள் அனுமதி இல்லாமல் உன் நோக்கத்துக்கு எப்படி கீரையை கொடுக்கலாமென கோபித்து, நன்றாக அடித்து கொட்டத்து தூணில் கட்டி வைத்து விட்டார்கள்.

தனக்கு எவ்வளவு துன்பம் வந்த போதிலும் தன் ஈகை குணத்திலிருந்து மாறுபடுவதில்லை. யார் வந்து எது கேட்டாலும் தங்களிடம் உள்ளதை இல்லை என்று கூறாது கொடுத்து விடுவார். அந்த ஆண்டிலேயே தன் தந்தை ஆறுமுகம் சேர்வை இறைவனடி சேர்ந்து விட்டார்.

நாகுவின் உடன் பிறந்தவர்களில் மூத்த சகோதரர் பெயர் முத்துகருப்பன் சேர்வை, இரண்டாமவர் சுப்பையன் சேர்வை, மூன்றுமவர் (சுவாமிகள்) **நாகு.** அவருக்கு இளைய சகோதரர்கள் இருவர். நாகுவுக்கு மூத்த சகோதரிகள் மூவர், இளைய சகோதரிகள் இருவர். மூத்த சகோதரர் பர்மா தேசத்துக்கு சென்றிருந்தார். தகப்பனார் மறைந்த செய்தியை

தந்தி மூலம் அறிந்து புறப்பட்டு வந்து தகப்பனாருக்குச் செய்ய வேண்டிய கர்ம சாஸ்திரங்களை நல்ல முறையில் முடித்து விட்டு குடும்பத்தை நடத்தி கொண்டிருந்தார். பிறகு இரண்டாவது சகோதரர் சுப்பையா சேர்வை ரங்கூனுக்குச் (பர்மா) சென்று விட்டார்.

நாகுவிற்கு 10 வயது பிராயத்தில் குடும்பத்தில் பத்து பசுமாடுகள் இருந்தன. அவைகளை மேய்த்து பராமரிப்பதுதான் நாகுவின் வேலை.

கிராமத்தில் ஆடி மாத திருவிழாவிற்காக முளைப்பாரி வளர்த்து 8 வது நாள் சுவாமி கும்பிட்டு, நாடகம் நடத்தி ஆடு, கோழிகளைப் பலி கொடுத்து, 9 வது நாள் காலையில் மேள, தாளம், ஆடல், பாடல் கரக ஆட்டத்துடன் வளர்ந்துள்ள முளைப்பாரியைக் கொண்டு போய் குளத்தில் விட்டு விடுவது வழக்கம். 8 வது நாள் விஷேச பூசை முடிந்து பலி கொடுத்த பின், கிராம மக்கள் உறவினர்களுடன் சேர்ந்து விருந்துண்டு மகிழ்ந்து இருப்பார்கள்.

அது போன்ற ஒரு சமயம் நாகு தன பசுக்களை ஏரி, குளத்தில் மேயவிட்டு விட்டு தன் சகாக்களுடன் ஏரிக்கரையில் இருந்தார். கவனக் குறைவாக இருந்த சமயம் தன பசுக்களில் ஒன்று, அடுத்த கிராமத்துக்-காரர் வயலில் புகுந்து, சோளம், குதிரைவாளி பயிர்களை மேய்ந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்த பாதிக்கப்பட்ட வயல்காரர் நாகுவின் பசுவை ஓட்டிப் போய் தன் வீட்டில் கட்டி வைத்திருந்தார். இந்த விபரம் நாகுவிற்கு தெரியாது. மாலைப் பொழுதானதும் மாடுகளெல்லாம் வீடு வந்து சேர்ந்தன. ஆனால் ஒரு பசு மாடு மட்டும் வந்து சேரவில்லை. ஊர் பூராவும் தேடிப்பார்த்தும் காணவில்லை மூத்த சகோதரர், மாட்டை எங்கே விட்டு வந்தாய் என்று கோபமாக நாகுவிடம் கேட்டார். நாகுவும் பயந்து கொண்டு இங்குதான் வந்தது என்று சொல்லியதுடன் எங்கு தேடியும் மாட்டை கண்டு பிடிக்க முடியவில்லை.

மூத்த சகோதரரும் கோபத்துடன் நாகுவை கீழே தள்ளி முதுகிலேறி மிதித்தார். அப்பொழுது நெஞ்சில் மொடு மொடு வென்று நெறிவு உண்டானது. அழுதால் ரொம்பவும் அடிப்பாரே என்று பயந்து பொறுமை-யுடன் வீடு வந்து சேர்ந்தார்.

சிறிது நேரத்தில் அடுத்த கிராமத்தில் பசுவைக் கட்டி வைத்திருக்கிற செய்தி அறிந்து, போய் பசுவைக் பிடித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது தான் நாகுவிற்கு பயம் தெளிந்தது. அன்றி-லிருந்து எந்த வேலைக்குப் போனாலும் சர்வ ஜாக்கிரதையாக கவனமுடன் இருந்து வருவார்.

அந்த ஆண்டிலேயே மூத்த சகோதரர் அவருடைய மாமனார் வீட்டில் போய் தங்கி விட்டார். ஆகவே குடும்பப் பொறுப்பு நாகுவின் தலையில் விழுந்து விட்டது. கூலி ஆட்களை நியமித்துக் கொண்டு நிலபுலன்களை பார்த்துக் கொண்டு, தயை, தாக்ஷண்யம், தர்மம் முதலிய நற்குணங்களுடன் யாவர்க்கும் நல்ல பிள்ளையாக இருந்து வந்தார். சிறிய கிராமம் ஆகையால் மற்ற குடும்பங்களில் ஏற்படும் சண்டை சச்சரவுகளை யாருக்கும் பாதகமின்றி சமரசம் பேசி தீர்த்து வைப்பது நாகுவின் வழக்கம்.

தான் சிறு விவசாயியாக இருந்த போதிலும் தன்னிடமுள்ள சாமான்களை யாரும் கேட்டால் இல்லை எனாது கொடுத்து வாங்குவார் ஊரிலுள்ளவர்களுக்கும், பெரிய மனிதர்களுக்கும், சாதுசங்கம் ஞானி களுக்கும், மகான்களுக்கும் வேண்டிய உதவிகளை செய்வதுடன், அவர்கள் சொல்லும் வார்த்தைகளுக்கு பணிந்து பணிவிடை செய்து வருவார்.

நாகுவிற்கு பிறவியிலேயே இடதுகால் குதி நரம்பு சிறுத்துப் போய் நடக்க பலம் இருக்காது. அந்த குதிங்காலில் கல்லோ, முள்ளோ குத்தினால் இரும்பைக் காய்ச்சி சுட்டது போல் இருக்கும். வழியில் கல் முள் கிடந்தால், தனக்கு ஏற்படும் துன்பம் போல் தானே மற்றவர்களுக்கும் இருக்கும் என நினைத்து, அந்த கல், முட்களை எடுத்து அப்புறப்படுத்திய பின்புதான தன் வேலையை கவனிப்பது வழக்கம். கண் தெரியாத யாரும் பாதை தெரியாது கலங்கி நின்றால் அவர்களை அழைத்துக் கொண்டு போய் அவர்கள் விரும்பிய இடத்தில் விட்டு வருவார்.

தேவாலயங்களைக் கண்டால் அந்த இடத்தை சுத்தம் செய்து, துண்டை விரித்து படுத்துக் கொண்டு கடவுளே நீ சுய ரூபமாய் வந்து கேட்ட வரம் தந்து இரட்சித்து அருள்புரிய வேணுமென்று தியானித்துக் கொண்டு நித்திரை செய்வது வழக்கம்.

நாகுவிற்கு விபரம் தெரிந்த நாள் முதல் குடும்பத்தை விட்டு வெளியே கிளம்பும் வரை பசியால் ஒருநாளும் வருந்தியதில்லை.

நாகு செய்து வந்த விவசாயம் வீண் போனது இல்லை. அந்த ஊரில் 15, 16 ஏர் மாடு வைத்து விவசாயப் பண்ணை நடத்தி வந்த விவசாயியும் தன் மக்கள், பண்ணை ஆட்களைப் பார்த்து ''ஓர் அரைக்கால் ஜீவன் செய்து வரும் விவசாயத்துக்கு நீங்கள் செய்யும் விவசாயம், ஈடாகுமா' என்று கேட்பது வழக்கம்.

இந்த நிலையில் 1912 ம் வருடம் நாகு ரங்கூனுக்கு பிரயாணமானுர். ரங்கூனில் தன் மூத்த சகோதரர் சுப்பையா சேர்வை நாட்டுக்கோட்டை செட்டியார் ஒருவரின் விவசாயப் பண்ணையில் ஆண்டு ஒன்றுக்கு ரூ 120-00 சம்பளத்தில் மேற்பார்வையாளராக பணிபுரிந்து வந்தார். அவரிடம் தான் நாகு போய் சேர்ந்தார். நாகுவை பார்த்த சகோதரர் ''அன்பிற்கு முண்டோ அடைக்கும் தாள்' என்னும் முதுமொழிக்கிணங்க நாகுவை அனபுடன் வைத்துக் கொண்டார். நாகுவிற்கு கல்வி அறிவில் அபிவிருத்தியில்லா -திருந்ததால் கல்வி புகட்ட எண்ணி நல்ல ஆசிரியர் ஒருவரை கண்டுபேசி, அவ்வாசிரியரிடம் கல்வி பயில நாகுவை ஒப்புவித்தார். நாகுவும் ஆசிரியருக் -குப் பணிந்து, கருத்துடன் பயின்று, 1914 ல் எடுத்த புத்தகத்தை வாசிக்கக் கூடிய அபிவிருத்தி உண்டானது.

அதன்பின் மோர்மானேச் சேர்ந்த ரெங்கங்கல் என்ற ஊரில் நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவரின் பலசரக்குக் கடையில் மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஐந்து என்ற ஊதியத்தில் வேலே பழகிக் கொண்டிருந்தார். ஆறுமாதங்கள் கடையில் வேலை பழகியபின் அக்கடையை விட்டு விலகி தன் தமயனுரிடம் இருந்து வந்தார். பின் மோர்மானுக்கு மாதம் ரூ 7/- ஊதியத்தில் ஓர் வேலைக்கு செல்வதாக முடிவுசெய்திருக்கும் பொழுது, ஓர் நாள் இரவில் நித்திரை செய்யும் பொழுது, பஞ்சவடிவமுள்ள கிளிகளும், குதிரைகளும் கனவில் தோன்றின. இதைப் பார்த்து ஆச்சரியப் பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, கோடி சூர்யப் பிரகாசமாக வெளிச்சம் தோன்றின. அங்கு இருக்கும் பொருள்கள் யாவும் ஜோதி மயமாகவே தெரிந்தது. 'இது கடவுள் குடிக்கொண்டிருக்கும் கைலாசமாக இருக்குமோ' வேறு எங்கும் இப்படிபட்ட அழகான ஜோதி பிரகாசமாக இருக்க காரண மில்லே என்று நினேத்து, உடனே எழுந்து அமர்ந்து கடவுளைத் தியானித்துக் கொண்டிருந்தார்.

விடிந்தவுடன் முகம் கை கால்களே சுத்தம் செய்து காலைக் கடன் முடித்து வந்து கொண்டிருக்கும் பொழுது, எதிரே வயதான நாவிதர் ஒருவர் தென்பட்டார். அவரிடம் தான் இரவில் கண்ட காட்சிகளை கூறி விபரம் கேட்க, அந்த மனிதர் 'நீங்கள் கண்ட தரிசனம் கடவுளுடைய மகத்துவமாயிருக்கிறது, இதை வேறுயாருக்கும் சொல்ல வேண்டாம், கொஞ்ச நாளில் கடவுள் நேரடியாக தோன்றி காட்சி கொடுத்து நல்வழி காட்டுவார்' என்று கூறிச் சென்று விட்டார்.

மோர்மான் செல்ல ஐந்து நாட்கள் இருக்கும்பொழுது வேதாந்தி ஒருவர் வந்தார். அவர் கும்பகோணத்தைச் சேர்ந்த தங்கம் பொன் செய்யும் கம்மாள இனத்தைச் சேர்ந்தவர், அத்தொழிலே விட்டு விட்டு

வேதாந்தியாக இருக்கிறார். அவர் நாகுவை அழைத்து அருகில் வைத்து கொண்டு நீ நல்ல பிள்ளை நான் கூறும் உபதேசத்தை தவறாமல் கடை பிடித்து நடந்து வந்தால் கடவுள் கூடிய சீக்கரம் தோன்றி நீ கேட்டபடி அருள் செய்வார் என்று கூறினார். நாகுவும் அவர் கூறியபடி அன்று முதல் தவறாமல் ஜெபம் செய்து வந்தார்.

மோர்மான் போய்ச் சேர்ந்து சமையல் வேலை பார்த்துக் கொண்டு கடவுளை சதா காலமும் தியானம் செய்து கொண்டு ஆறுமாத காலம் வரையில் இருந்து வந்தார். அது சமயம் கடவுள் காவி உடை அணிந்து நாகுவிற்கு காட்சி தந்து உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டார் நாகு ஆசனம் போட்டமர்ந்து விழி இரண்டையும் புருவ மத்தியில் செலுத்தி ஜெபம் செய்து கொண்டு இருக்கும் போது தான் காவி உடை உடுத்திய சாமி கேட்டதால் நாகுவிற்கு ஞானம் ஏற்பட்டு அடியேனுக்கு குரு உபதேசம், ஞான உபதேசம், பிரம்ம உபதேசம், தந்து அருள் புரிய வேண்டும் என்று தெரிவித்தார். சன்னியாசி கோலத்தில் வந்த இறைவனும் "பிள்ளாய் நீ காசி யாத்திரை சென்று புண்ணிய ஸ்தலங்களை தரிசித்து விட்டு வா நீ கேட்டபடி அருள்புரிகிறேன்" என்று உரைத்து மறைந்தார்.

வீடு நமக்குத் திருவாலங்காடு விமலர் தந்த
ஓடு நமக்குண்டு, வற்றாத பாத்திரம் – ஓங்கு செல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல்லாம் தர நல்நெஞ்சமே
ஈடு நமக்கு ஒருவரும் இங்கு இல்லையே
(பட்டினத்தார்)

என்ற பட்டினத்தார் கூற்றுக் கிணங்க ஆண்டவனின் கட்டளைப் படியே 1 ½ வருடகாலமாக செய்து வந்த சமையல் வேலையை முடித்து விட்டு சம்பளப் பணம் பாக்கி ரூ.120/- ஐ செட்டியாரிடம் பெற்றுக் கொண்டு, "ஐயிரண்டு திங்களாய் அங்கமெல்லாம் நொந்து பெற்றுப் பையலென்ற போதே பரிந்தெடுத்து - செய்யயிரு
கைப்பிறத்திலேந்தி கனகமுலை தந்தாளை
இப்பிறப்பில் என் காணிக்கையே" என்று ரூபாய் ஐம்பதை தான் குடியிருந்த கோவிலும் கண்கண்ட தெய்வமுமான தாயார் முத்துதேவி அம்மையாருக்கு மணியார்டர் செய்து விட்டு ரங்கூன் வந்து கல்கத்தா நகருக்கு கப்பல் பயணச்சீட்டு வாங்கி கப்பலேறி கல்கத்தா நகர் போய்ச் சேர்ந்தார் சுவாமிகள்.

கல்கத்தா நகரில் ஒரு தமிழ்பிராமணர் போஜன சாலையில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தார். மூன்றாம் நாள் காலையில்,

"நல்லா தவற்றை நிலையின் என்றுணரும்
புல்லறி வாண்மை கடை"

''நெருநல் உளனொருவன் இன்றில்லை என்றும்
பெருமை படைத்திவ் வுலகு''

என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க இவ்வுலகில் எப்பொருளும் நிலையற்றது என்று நினைத்து தனக்குச் சொந்தமான பொருட்களாகிய ஜமுக்காளம், புத்தக மூட்டை, தட்டு முட்டுச் சாமான்கள், வேஷ்டி துண்டு ஆகியவற்றை போஜன சாலையிலேயே போட்டு விட்டு ரூபாய் நாலரை கொடுத்து ரயில் பயண சீட்டு வாங்கி ரயிலேறி காசிக்குப் போகும் வழியில் 'கயா' வை தரிசித்து ஜெப தபம் செய்து முடித்து காசி மாநகர் போய்ச் சேர்ந்தார்.

காசியிலுள்ள அந்தணர் ஒருவர் சுவாமியை அன்புடன் அழைத்து அங்குள்ள தீர்த்தக் கட்டங்களையெல்லாம் காண்பித்தும் ஸ்நானம் செய்வித்தும் காசிவிஸ்வநாதர், கேதார ஈஸ்பரம், விசாலாட்சி, அன்னபூரணி, வயிரவர், துர்க்கை, காளி, ஆகியோரின் ஆலயங்களையும், இன்னும் அநேக ஸ்தலங்களையும் பஞ்சகோச யாத்திரை, 64 கட்ட தீர்த்த ஸ்நானமும் செய்வித்து, வீரவாகு காலகண்டன், அரிச்சந்திரன், விருத்தாந்த விஷயங்களையும், அவர்கள் ஆலயங்களையும் 63 வீதிகளையும், 63 அன்னச் சத்திரங்களையும், இன்னும் மகான்களையும், மகான்கள் அடக்கமான இடங்களையும் குமாரத்தேவர், கணேச சுவாமிகள் ஆலயங்களையும் காண்பித்து வைத்தார்.

பிறகு சுவாமிகள் கேதார் கட்டத்தில் லிங்கம் வைத்து பூஜை செய்தும், ஜெப தப நிஷ்டைகள் நடத்திக் கொண்டிருப்பதும், இரவில் 3 மணியளவில் எழுந்து கேதாரக் கட்டத்தில் ஸ்நானம் செய்து முடித்து கேதார ஈஸ்வரன் கோவிலுக்குப் போய் லிங்கத்தை வைத்து பூஜை செய்து ஜெப தப தியானம் செய்து கண்மூடி பார்வையை புருவ மத்தியில் செலுத்தி ரேசக, பூரக கும்பகம், செய்து நிஷ்டையில் இருந்து வந்தார்.

அப்போது ஹரி ராமகிருஷ்ண பரமேஸ்வர பார்வதியாகிய பராபரக் கடவுள் மானிட வடிவங்கொண்டு, வெள்ளைவஸ்திரம் பூண்டு ஆயிரம் ஆதித்தர்கள் ஒன்ருக உதித்தாற் போல ஜோதிப் பிரகாசமாய்த் தோன்றி றுநாள் நிகழப் போகும் காரியங்களையும் நிகழ்ச்சிகளையும் சொல்லி மறைந்தார். அன்று முதல் நடக்கப் போகும் நிகழ்ச்சிகளை நாள்தோறும் சொல்லி வருவது வழக்கமாக இருந்து வந்தது.

பராபரக் கடவுள் அன்றாடம் கூறக் கூடிய விஷயப்படியே, அவர் உத்தரவுப் படியே தினமும் நடக்கும். இன்று உனக்கு நளபாகச் சாப்பாடு

கிடைக்கும் என்று உத்திரவு செய்வாரானல் அப்படியே கிடைக்கும். இன்று உனக்கு ஆகாரமே கிடைக்காது என்ருல், அன்று முழுவதுமே ஆகாரம் கிடைக்காது. இந்த விதமாக பராபரக் கடவுள் நித்திய தரிசனம் தந்து இரட்சித்து வரலானுர்,

இதில் ஒரு அணுவேனும் பிசகாது சத்தியமாக நடந்து வந்தது. இந்த விதமாக சித்திரை, வைகாசி ஆனி இந்த மூன்று மாத காலமாய் கேதார கட்டத்தில் இருந்து ஜெப தபம் முடித்து, நான்காவது மாதமாகிய ஆடி மாதம் சுவாமிகள் வைத்து பூஜித்து வந்த லிங்கம், தாம்பாளம், பஞ்சபாத்திர கரண்டி 1, 32 மணியுள்ள உருத்திராக்ஷ மாலை 1. இவைகளை -யெல்லாம் தாம்பாளத் தட்டில் வைத்து, துண்டு வஸ்திரத்தால் மூட்டையாக கட்டிக் கொண்டார். அப்பொழுது மனம் நினைத்தது ''காசியில் இறப்பவர்-களுக்கு மோட்சம் கிட்டும் என்று சொல்கிறார்களே, நாமும் கங்கையில் அமிழ்ந்து போவோமானல் மோட்சம் கிடைக்கலாமே'' என்று மூடபக்தியாய் யோசனை செய்து வைராக்கியமாக, துண்டில் கட்டியிருந்த பூஜை சாமான் களுடன் கங்கையில் இறங்கி பாதாள கங்கை வரை நீந்திச் சென்று, பூஜை சாமான்கள் மூட்டையை கங்கையில் விட்டு விட்டு சுவாமிகள் மூன்று முறை கங்கையில் மூழ்கி நான்காவது முறையாக மூழ்கிய சமயம், முழங்கால் அளவுத் தண்ணீரில் கொண்டு வந்து விட்டு விட்டது. இதுவும் ஸ்ரீ ஹரி ராமகிருஷ்ண பார்வதி பரமேஸ்வரனுகிய பராபரக் கடவுளின் திருவிளையாடல் தான் என்று சுவாமிகள் மனதில் நினைத்து சந்தோஷமடைந்தார். பிறகு ஸ்நானம் செய்து முடித்துக் கொண்டு, கேதார ஈஸ்வரன் கோவிலுக்குச் சென்று ஜெப தப நிஷ்டை செய்து கொண்டு இருக்கும் பொழுது, அன்றிரவு அயோத்தி யாத்திரை செல்லும் படியாக கடவுள் உத்திரவு செய்தார்.

## சுவாமிகளின் அயோத்தி யாத்திரை

மறுநாள் சுவாமிகள் காசி மாநகரை விட்டு சாலை மார்க்கமாய் அயோத்தி மாநகரை நோக்கி கால்நடையாய் பயணம் செய்தார், பயணம் செய்யும் வழியில் சுவாமிகளைக் கண்ட அன்பர்கள், சுவாமிகளை அழைத்துக் கொண்டு போய் உபசரிப்பது மட்டுமல்லாமல் தர்மங்களும் விஷேசமாய் நடத்தினார்கள். ஆகையால் சாப்பாட்டு விஷயத்தில் சிரமம் என்பது ஏற்படவே இல்லை.

அயோத்தி மாநகரம் செல்லும் வழியில் ஒரு பட்டினம் இருந்தது. அங்கு கொத்தவால் என்னும் பெயருடைய பிராமணர் ஒருவர் சுவாமிகளைக்

கண்டு நமஸ்கரித்து அழைத்து தன் இல்லத்திற்குக் கூட்டிப் போய் ஆசனத்தில் அமரச்செய்து தனது மனைவியிடம், சமையல் செய்து சுவாமி-களுக்கு ஆகாரம் படைக்கும்படி கூறினர். அந்த அந்த அம்மையாரும் உடனே சமையல் செய்து சுவாமிகளுக்குப் போஜனம் படைத்தார்கள். சுவாமிகளும் போஜனம் அருந்திவிட்டு அங்கு தங்கியிருந்தார்கள்.

பிறகு அந்த பிராமணர் தனது மனைவியிடம் கூறியதாவது ''சுவாமிகள் பாதயாத்திரையாக நடந்தே வந்திருக்கிறார்கள், அவர்களுக்கு கை, கால், உடம்பு அசதி ஏற்பட்டு நோகும், ஆதலால் அவருடைய பாதத்தை பிடித்துவிடு, என்று கூறியுள்ளார். அந்த அம்மையாரும் தனது நாயகன் உத்திரவுப்படி சுவாமிகளின் பாதத்தை பிடித்துவிட வந்தார்கள். அப்போது சுவாமிகள் ''நீயோ வயதுமுதிர்ந்த பிராமணத்தாய், நீ என் பாதங்களைப் பிடிக்க வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார்கள். அம்மாதும் சரி என்று ஒப்புக் கொண்டார்கள். அன்று இரவு அங்கு தங்கியிருந்து மறுநாள் அயோத்தியாபுரி வந்து தங்கி

தசரத நந்தன ராம்ராம், தசமுக மர்த்தன ராம்ராம்,
பசுபதி நந்தன ராம்ராம், பாவ விமோசன ராம்ராம்,
ஜானகி ஜீவனராம்ராம், சஞ்சனபாலக ராம்ராம்,
ரகுபதி ராகவ ராஜா ராம், பதீத்தபாவன சீதாராம்''

எனப்பாடி ஜெப தப நிஷ்டைகள் செய்துகொண்டு சில நாட்கள் தங்கி-யிருந்தார்.

அப்போது ஸ்ரீ ஹரி ராமகிருஷ்ண பார்வதி பரமேஸ்வரனாகிய பராபரக் கடவுள் மானிட வடிவங்கொண்டு தரிசனம் தந்து சுவாமிகளை நோக்கி ''நீ நாளை அஸ்தினுபுரம் செல், அங்கு இப்போது விழா நடக்கிறது'' என்று கூறி மறைந்தார்.

சுவாமிகள் இறைவனின் கட்டளையை சிரமேல் ஏற்று மறுநாள் பிரயாணப்பட்டு அஸ்தினுபுரம் வந்து சேர்ந்-தார்கள். அன்றிரவு ஜெப தப நிஷ்டைகள் புரிந்தார், மறுநாள் காலையில் அங்குள்ள ஜனங்கள் கூடிகங்கையில் ஸ்னானம் செய்து மலையைக் கிரிசுத்தி தான தர்மங்கள் விஷேசமாய் நடத்தினார்கள். சுவாமிகள் அன்று மாலை 4 மணிக்கு பிரயாணமாகி, பரிசம் என்னும் கிராமத்திற்குப் போய் தங்கி ஜெப தவ நிஷ்டை புரிந்தும், மறுநாள் காலையில் பிரயாணமாகி, நந்தகாமம் போய் சேர்ந்துமலை மேல் உள்ள நந்தகோபால் ஆலயம், லிங்க அமைப்பு முதலிய விருத்தாந்தங்களையும் தெரிந்து தரிசித்தும், பின் பிரயாணப்பட எத்தனிக்கும் போது, அடுத்த பக்கத்தில்

தாமரைத்தடாகம் ஒன்றிருந்தது. அதன் சமீபம் சாது ஒருவர் மடம் கட்டியிருந்தார். அங்கு இரண்டு நாட்கள் தங்கிப் போகலாமென்று நினைத்து சுவாமிகள் ஜெப தப நிஷ்டை செய்து முடித்து விட்டு ரொட்டி சுட்டு சாப்பிடும் சமயம், அம்மடத்தின் சாது வந்து தரிசித்து சாப்பாட்டிற்கு அழைத்தார்.

உணவருந்தி முடித்தாகி விட்டது என்று சுவாமிகள் சொன்ன படியால், அந்த சாது மறுநாள் வந்து சுவாமிகளை அழைத்துக் கொண்டு போய் தமது மடத்தில் வைத்து ஆகாரம் கொடுத்து உபசரித்து அனுப்பி வைத்தார். அப்போதெல்லாம் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் உணவு உண்பது என்ற கட்டுப்பாட்டுடன் சுவாமிகள் இருந்து வந்தார்.

பிறகு மீண்டும் சுவாமிகள் அஸ்தினாபுரம் போய்ச் சேர்ந்து, பஞ்ச பாண்டவர்கள் கோட்டையையும், அவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து தப்பி செல்ல ஏற்பட்ட சுரங்கப் பாதையையும் பாண்டவர்கள் கோட்டைக்கும், டெல்லி மாநகருக்கும், புதிதாக ரோடு போடப்பட்டிருப்பதையும் பட்டினம் பாதுகாப்புடன் இருப்பதையும் துரியோதனன் கோட்டை இடிந்து பாழடைந்து கிடப்பதையும், அதன் கீழ்பக்கத்தில் மோவுத்துக்காரன் பள்ளிவாசல் இடிந்து கிடப்பதையும், பார்த்து அங்கு சற்று நேரம் ஜெபம் செய்து முடித்துப் பிறகு டெல்லி பட்டணம் போய்ச் சேர்ந்தார்.

அங்கிருந்து 'யமுனை' நதிக்குச் சென்று ஸ்நானம் செய்து 29 நாட்கள் தங்கியிருந்து ஜெப தவம் செய்து கொண்டிருந்தார்கள். அந்த நதிக்கும் டெல்லி பட்டிணத்துக்கும் இரண்டு மைல் தூரம். டெல்லி பட்டிணத்-திலிருந்து சக்கரவர்த்தி பட்டம் சூட்டிக் கொண்ட மைதானம் மூன்று மைல் தூரம்.

முப்பதாம் நாள் சுவாமிகள், கடவுளின் உத்தரவுப்படி ஹரித்து-வாருக்கு, சாரங்கப்பூர் வழியாக போகும் போது ரோட்டு மார்க்கமாய் இருந்ததால் சுவாமிகளைக் கண்ட அன்பர்கள் ஏராளமாக சாப்பாடு மற்றும் வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்து உதவினார்கள். பிறகு சுவாமிகள் சாரங்கப்பூர் போய்ச் சேர்ந்தார்கள். அவ்விடத்தில் 23 நாட்கள் தங்கியிருந்து ஜெப தவ நிஷ்டைகள் செய்து கொண்டிருக்கும் போது 24 ம் நாள் கடவுள் உத்திரவுப்படி ஹரித்துவாரம் போய்ச் சேர்ந்தார்கள். வடநாட்டில் பேசப்படும் பாஷை இந்துஸ்தானி. சுவாமிகளுக்கு ஹிந்துஸ்-தானி சுமாராக தெரியுமாகையில் பாஷை விஷயத்தில் சிரமமில்லை.

சுவாமிகள் முன்பு இல்லற வாசியாக இருக்கும் காலத்தில், சூரியன் அஸ்தனமாகிவிட்டால் வெளியில் செல்வதற்குப் பயம் அதிகம். ஆனுல் சுவாமிகள் யாத்திரை ஆரம்பித்ததிலிந்து காடு மலை வனுந்தரங் கங்களில் இரவு பகல் எந்த நேரத்திலும், கடவுள் அனுக்கிரகத்தால் எந்தவித பயமுமின்றி, யாத்திரை எவ்வித தடையுமில்லாது நடைபெற்று வந்தது.

ஹரித்துவாரத்தில் கங்கை நதிக்கரையில் சுவாமிகள் ஜெப தப நிஷ்டை செய்து பத்திரி நாருயணம், பிர்மகபாலம்; யமுனை, கங்கை உற்பத்தி, கேதார ஈஸ்பரனின் பிர்மகபாலம் இவைகளுக்குள் அடங்கிய தீர்த்தம் யாவும் ஆடி, தரிசனம் செய்வித்து, ஹரித்துவாருக்கு கொண்டு வந்து விடுகிற அதிசயங்களையும், கங்கைத் தடாகத்தில் மீன்கள் கூட்டம் கூட்டமாக கூடி விளையாடுகிற அதிசயங்களையும் தப யோகிகள் கங்கைக் கரையில் தவச்சாலைகள் ஏற்படுத்தித் தவம் செய்து வருகிற அதிசயங்களையும் பார்த்துத் தரிசித்து, அங்கு கொஞ்ச நாட்கள் தங்கி ஜெப தப நிஷ்டைகள் செய்து வந்தார்.

பிறகு சித்திரை மாதம் ஹரித்துவாரை விட்டுப் பத்ரி நாரயணனுக்கு பிரயாணப்பட்டு, சத்தி நாராயணம் போய்த்தங்கி அங்குள்ள சிவன் கோவிலையும், மற்றும் இரண்டு மச்சங்கள் (மீன்கள்) தவம் செய்து கொண்டிருப்பதையும் பார்த்து தரிசித்துக் கொண்டார்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு லெக்ஷுமணன் சூளைக்குப் போய்ச் சேர்ந்து, அங்குள்ள சாதுக்களை தரிசித்து, ஜெப தபங்களை செய்து முடித்து, ஆடு பாலம் ஒன்றைக் கடந்து வியாசர் கங்கைக் கட்டத்தில் ஸ்நானம் செய்து அங்கு தங்கி ஜெப தவம் முடித்து, மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு தேவப்பிரயாகை போய் தங்கி ஜெப தவம் செய்தார்கள்.

அன்று மாலை அவ்விடம் விட்டுப் புறப்பட்டு டேரிக்கும், யமுனை கங்கை உற்பத்திக்கும் போகிற வழியிலுள்ள சிறிய கிராமத்தில் தங்காமல் பிரயாணம் செய்தார். சமீபத்தில் வேறு ஊர்கள் இல்லாத படியாலும், சூரியன் அஸ்தமனமான படியாலும், வழியில் இரண்டு மரத்தை நட்டு ஊஞ்சல் கட்டித் தொங்கிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்தார். அங்கிருந்த ஒருவர் கூறியதாவது ''சுவாமிகளே சூரியன் மறைந்து இருட்டு பயங்கர மாயிருக்கிறது. சமீபத்தில் வேறு ஊர்களும் கிடையாது, என்ன செய்யப் போகிறீர்கள்? இங்கு தங்கினால், இங்குள்ள வியாசமுனி உங்களைக் கொன்று போடுமே! என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று சொல்லி

விட்டு அங்கிருந்து சென்று விட்டார்.

அப்பொழுது சுவாமிகள் நினைத்ததாவது, ''வியாசமுனி வந்து நம்மைக் கொன்றால் நமக்கு முக்தியல்லவா கிடைக்கும். அப்படிச் செய்யாமல் சுய உருவோடு வந்து நேரில் ஆசீர்வதித்தால் சித்தி கிடைக்கும்'' என நினைத்து வியாசர் ஊஞ்சலின் பக்கத்தில் ஆசனம் போட்டு ஜெப தப நிஷ்டையில் இருந்தார்கள் சுவாமிகள். ஆனால் நடு நிசியில் அந்த ஊஞ்சலி-லிருந்து அகோரமான சப்தம் ஒன்று மட்டுமே கேட்டது. வேறு எதுவுமே நடக்கவில்லை. சுவாமிகளுக்கு எந்த வித பயமும் ஏற்படவில்லை. ''ஞானிகளுக்கு இல்லை இன்பமும் துன்பமும்'' என்பது உணரத்தக்கது. அன்றி-ரவெல்லாம் அங்கு இருந்துவிட்டு, விடியற்காலம் புறப்பட்டு அங்கிருந்து 60 மைல் தொலைவிலுள்ள டேரி பட்டணத்திற்கு மூன்றாம் நாள் போய் சேர்ந்து ஜெப தப நிஷ்டைகள் புரிந்தார்கள்.

டேரி என்பது இமயகிரியை ஆண்டு வந்த அரசனின் பட்டணம். மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு தராசு கேட்டுக்குப் போய் இரவு தங்கி ஜெப தபங்கள் புரிந்து, மறுநாள் பிரயாணமாகி யமுனுவுக்கு போகும் போது, அந்த வழி மிகவும் கஷ்டமானதாக இருந்தது. அங்கு ஓர் இடத்தில் பாதை ஒரு கை அகலம் தான் இருக்கிறது. அதில் கால் பெரு விரலை ஊன்றி கையால் மலையைப் பிடித்துக் கொண்டு மிக ஜாக்கிரதையாகப் போக வேண்டும். கொஞ்சம் பிடி தவறினாலும் கிடு கிடு பாதாளத்தில் விழுந்து மரணமடைய வேண்டியதுதான். சுவாமிகள் அதையும் கடந்து சென்றார். செல்லும் வழியில் ஓர் கிராமத்தில் கீரை விதையை மாவாக்கி ரொட்டி சுட்டு சாப்பிடுகிறார்கள். சுவாமிகளுக்கும் ரொட்டி கொடுத்தார்கள்.

பிறகு சுவாமிகள், யமுனு தேவிக்குப் பூஜை செய்யக் கூடிய பிராமணர் குடியிருக்கும் ஊரில் போய் கொஞ்ச நேரம் தங்கி, பின் புறப்பட்டு யமுனு நதி உற்பத்தியாகும் இடத்துக்குப் போகும் போது, எதிரில் ஒரு மலை இருந்தது. அதில் தங்கி ஜெப தவம் முடித்து, ஆகாரம் புசித்தபின், மலை மீதேறி மலை உச்சியில் போகும் போது, ஆயிரக் கணக்கான வானரப்படைகளும், கருமந்திக் கூட்டங்களும் சுவாமிகளுக்கு எதிராகவும், குறுக்காகவும் ஓடி சப்தம் செய்து கொண்டிருந்தன. சுவாமிகள் அவைகளைக் கண்டு ஒருவித திகைப்புக் கொண்டு

ஹரே ராம ஹரே ராம ஹரே ராம ஹரே ஹரே!
ஹரே ராம ஹரே ராம ஹரே ராம ஹரே ஹரே!

என்று பாடிய படி கடவுளைத் தியானம் செய்தார்கள். அந்த வானரக் கூட்டம் திசைக்கு ஒன்ருக ஓடி மறைந்து விட்டன.

பிறகு மலை மீதிலிருந்து கீழே இறங்கக் கூடிய பாதை முழுவதும் பனிக்கட்டிகள் உறைந்து இருந்தன. அவ்வழி சென்றோமானுல் கால் வழுக்கி விழுந்து மரணமடைய வேண்டியதுதான். வேறுவழி மிக கஷ்ட-மானதாக இருக்கிறது. எது எப்படி நடந்தாலும் சரி! கடவுள் சித்தப்படி நடப்பது நடக்கட்டும் என கடவுளை தியானம் செய்து, சற்று விலகி மரம் செடி கொடிகளைப் பிடித்துக் கொண்டு, தலைகீழாக இறங்கி யமுனு உற்பத்தி ஸ்தானம் போய்ச் சேர்ந்தார்கள்.

அங்கு ஒரு பிராமணர், சுவாமி தரிசனம் செய்து கொண்டு, அங்கு வரும் யாத்திரீகர்களுக்கு, அரிசி, பருப்பு சாமான்கள் வைத்து வியாபாரம் செய்து கொண்டிருந்தார். அவரிடம் சுவாமிகள் அரைக்கால் படி அரிசி வாங்கி அதை ஒரு துணியில் முடிந்து, அங்குள்ள அக்னி குண்டத்தில் (வெந்நீர் ஊற்று) போட்டு சிறிது நேரம் கழித்து எடுத்துப் பார்த்த போது நன்ருக வெந்து சாதமாக இருந்தது. அதை ஆண்டவனுக்குப் படைத்து, சுவாமிகள் புசித்தார்கள்.

அக்னி குண்டத்தின் விஷேசம் யாதெனில் மலை அடியில் பல துவாரங்களின் வழியாக பாதாளத்திலிருந்து இரண்டு அடி உயரத்துக்கு குமிழி குமிழியாக எழுவதும், அமிழ்வதுமாய் இருக்கிறது. அங்கே ஒரு சிறிய கோவில் அதில் யமுனு தேவியின் விக்கிரகம் இருக்கிறது. ஒரு சிறு கல் குகையில் யமுனுதேவிக்கு பூஜை செய்யும் பிராமணர் தங்கியிருக்கிருர். யாத்திரை வாசிகள் அங்கு தங்குவதற்கு வசதியில்லாததால், யாத்திரை வாசிகள் அனைவரும், சுவாமி தரிசனம் செய்து விட்டு உடனே திரும்பி விடுவார்கள். மலையின் மேல் பார்த்தால் பனிக்கட்டிகள் உறைந்து வெள்ளி மலை போல் தோன்றும். அப்பனிக்கட்டியின் மீது தடுமாறி விட்டோமானுல் உடலிலுள்ள இரத்தத்தை ஒரு நிமிஷத்தில் உறிஞ்சி விடும். மரணமடைய வேண்டியதுதான். யாத்திரை வாசிகளில் அநேகம் பேர் அப்பனியில் சருக்கி தடுமாறி மரணமடைந்திருப்பதாக கூறினுர்கள். யமுனு நதிக்கு அப்பால் யாரும் போக முடியாது. போனவழியே மறுபடியும் திரும்பி தராசு என்கிற இடத்துக்கு வந்து கங்கை உற்பத்திக்குப் போகிற வழியில் பிரிந்து போக வேண்டும். தராசுக்கும் யமுனுவுக்கும் 90 மைல் தூரம்.

யமுனு நதியை விட்டு 6 வது மைலில் அனுமான் கங்காநதி தீர்த்தம் இருக்கிறது. அங்கு சுவாமிகள் ஸ்நானம் செய்து ஜெப தப நிஷ்டைகள் முடித்து அன்று இரவு அங்கு தங்கியிருந்த போது, குளிரால் மிகவும் கஷ்டம் உண்டானது. இருப்பினும் கடுங்குளிரையும் தாங்கிக் கொண்டு அன்றிரவைக் கழித்து, மறுநாள் அங்கிருந்து பிரயாணம் செய்து,

குறுக்குப் பாதையில் (யாத்திரை வாசிகள் யாரும் செல்ல முடியாத பாதை) சப்த காசிக்கு செல்லும் வழியில், பளியர் எனற வகுப்பார் காலில் பூட்ஸ் அணிந்து கொண்டு செல்கிறார்கன். அந்த மலையானது செடிகளும், நிறைந்திருக்கிறது. அந்த பளியர்கள் சுவாமிகளைப் பார்த்து, ''நீ உறை பனிக்கட்டிகள் உள்ள பாதையில் செல்வாயானல் மரணமாகி விடுவாய். ஆகவே நீ போக முடியாது. இப்பொழுது வந்த பாதை வழியே போனல் தான் பிழைப்பாய்'' என்று இந்துஸ்தானி பாஷையில் கூறினர்கள்.

சுவாமிகளும், முன் வைத்த காலை பின் வைப்பது முறையல்ல என நினைத்து, இருந்தால் பரலோகம் இறந்தால் சிவலோகம், இந்த ஸ்தூலம் எப்படிப் போனல் என்ன எல்லாம் இறைவன் செயல் என்று கடவுளைத் துதி செய்து, அந்த குறுக்குப் பாதை வழியாகவே நடந்து சென்றார்கள். அந்த வழியானது சமமான மைதானம் போலிருந்தது. பனிக்கட்டிகள் உறைந்து கிடந்தன. அதைப் பார்த்ததும், பளியர்கள் சொன்னது சரியாய் முடிந்து விட்டது. இனி எப்படி நடந்தாலும் பராபரக் கடவுள் செயல் தான் என்று நினைத்து கைவசம் இருந்த அரிசியை சமையல் செய்து ஆத்ம திருப்தி செய்து விட்டு சற்று இளைப்பாறி, பிறகு பிரயா-ணத்தைத் தொடர்ந்தார்கள். நடக்க வழியில்லை. பனிக்கட்டிகளை விலக்கிக் கொண்டு போகலாம் என்று எண்ணினல் பக்கத்தில் 'ஆறை' முட்செடிகள் ஒன்றோடொன்று பிண்ணிப் போயிருக்கிறது.

சுவாமிகள் உடனே கடவுளைத் தியானம் செய்து அந்தச் செடிகளை மிதித்துக் கொண்டு நடந்தார்கள். பாதத்தில் ஒரு முள்ளேனும் தைக்க வில்லை. பாதத்தில் எவ்விதமான வலியும் ஏற்படவில்லை. மலையில் ஏறிப் போகும் போது எதிரில் பளியர் ஒருவர் வந்தார் சுவாமிகளைப் பார்த்து மிகவும் ஆச்சர்யப்பட்டு ''ஹே சாது பாபா'' இந்த வழியில் எப்படி வந்தாய் என்று கேட்டார். அதற்கு சுவாமிகள் பகவான் கொண்டு வந்து சேர்த்தார் என்று பதில் கூறினர்கள். பிறகு சுவாமிகள் சப்த காசி வந்து சேர்ந்தார்கள். உச்சியிலிருந்து அடி வாரத்துக்கு ஐந்து மைல் தூரம். சூரியனும் அஸ்தமித்து விட்டான்.

மலை உச்சியிலிருந்து தலை கீழாக இறங்க வேண்டும். அந்த வழியில் கட்டைகள் அம்பு மாதிரியாக நிறைய இருக்கிறது. இருள் சூழ்ந்து விட்டதால் வேகமாக இறங்கும் போது, ஓர் மரத்தின் வேர் சுவாமிகளின் வலது கால் பெருவிரலில் தட்டி தலை கீழாக விழும் சமயம், கடவுளை தியானம் செய்தார்கள். ஆண்டவன் அருளால் பக்கத்தில் உள்ள மரத்தை இருகைகளாலும் பற்றிப் பிடித்துக் கொண்டபடியால் இச்சரீரம்

நிலைப்பெற்றது. அற்புதக் கடவுள் சுவாமிகளுக்குச் செய்த உதவிகள் இவ்வளவு தான் என்று கணக்கிட முடியாது.

இவ்வளவு திருவிளையாடல்களும் சுவாமிகள் முன்பு மோர்மானி– லிருக்கும் போது, காசாய அங்கி தரித்து சன்னியாசி ரூபமாய் வந்து தரிசனங் கொடுத்து உனக்கு என்ன வேண்டும் என்று கேட்ட ஸ்ரீ பராபரக் கடவுளின் திருவிளையாடல் தான் என்று ஆனந்த முண்டாகி அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கு ஒரு சிறு கிராமம் இருக்கிறது. அவ்வூரில் கூனிக் கட்டிடக் கோவில் ஒன்று உள்ளது. அக்கோவிலில் சுவாமிகள் ஆசனம் போட்டு உட்கார்ந்து கொஞ்ச நேரம் ஜெப தப நிஷ்டைகள் செய்தார்கள் பிறகு அவ்வூரிலுள்ள இரண்டு அன்பர்கள் மாவு கொண்டு வந்து சுவாமிகளிடம் கொடுத்து ரொட்டி தட்டிச் சாப்பிடும் படியாய் சொல்லி சென்றார்கள். சுவாமிகளும் அந்த மாவை அன்புடன் வாங்கி வைத்துக் கொண்டு, ரொட்டி தட்டாமல் சும்மா இருந்து விட்டார்கள். மறுநாள் காலையில் எழுந்து சப்த காசிக்கு நடந்து போகும் வழியில் 8 மணிக்கு ஸ்நானம் செய்து ஜெப தபம் முடித்து விட்டு அந்த மாவை ரொட்டியாக தட்டி அந்த மலை வனத்தில் உள்ள இலை தழைகளைப் பிடுங்கி வேக வைத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்து, ஆத்ம திருப்தி செய்து கொண்டு கொஞ்ச நேரம் இளைப்பாறி பிறகு மாலையில் சப்த காசிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

சப்த காசியில் தவம் செய்கிற ஸ்தலமும், தீர்த்தக் கட்டமும், தர்மமும், விஷேசமாய் நடந்து வருகிறது. யாத்திரை வாசிகளுக்கு ரொட்டி, அரிசி, பருப்பு, மாவு, நெய் முதலியவைகளை தர்மமாகக் கொடுப்பது தினமும் நடந்து வருகிறது. யாத்திரை வாசிகள் ஐந்து நாட்கள் வரை அங்கு தங்கலாம். ஐந்து நாட்கள் வரை சாப்பாட்டு உதவிகளும் எவ்வித குறைபாடு மின்றி நடந்து வருகிறது. அவ்விடத்தில் சுவாமிகள், ஏழு நாட்கள் தங்கி தரிசனங்கள் செய்தும் ஜெப தப நிஷ்டைகள் புரிந்தும், அங்கிருந்து கங்கை உற்பத்திக்கு போகும் வழியில் எட்டு மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்துக்குச் சென்றார்கள். அங்கு சேட்டுகள் இருந்து கொண்டு அங்கு வருகிற யாத்திரைவாசிகளுக்கு எவ்வித கஷ்டமும் இல்லாதபடி சதாவாக தர்மங்கள் எவ்விதகுறைபாடு மில்லாமல் கொடுத்து ஆதரவு செய்கிறார்கள்.

பிறகு சுவாமிகள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு கங்கை உற்பத்தி ஸ்தானம் வந்து சேர்ந்தார்கள். அன்றிரவு அங்கு தங்கி ஜெப தப

நிஷ்டைகள் முடித்துக் கொண்டு விடியற்காலையில் கங்கை உற்பத்தியில் ஸ்நானம் செய்தார்கள். அப்பொழுதே சுவாமிகளுக்கு கண்கள் பார்வை தெரியவில்லை. கை கால்கள் யாவும் உணர்ச்சியற்று, ஒரு வித மயக்கம் உண்டாகிச் சிறிது நேரம் ஒன்றுமே தெரியாத நிலை ஏற்பட்டு காதுகள் இரண்டும் அடைத்துக் கொண்டது.

பிறகு 9 மணிக்கு சூரிய உஷ்ணம் சரீரத்தில் தாக்கிய பின்பு தான் உணர்வு தெரிந்தது. அந்த ஜலமானது அவ்வளவு குளிர்ச்சி வாய்ந்தது. அவ்விடத்தில் கங்காதேவிக்கு ஆலயமொன்று உண்டாக்கி, அதில் விக்கிரகம் வைத்து அதிவிமரிசையாய் பூஜை செய்து வருகிறார்கள். சுவாமிகள் அவ்விடத்தில் இரண்டு நாட்கள் தங்கி ஜெப தப நிஷ்டைகள் முடித்து, மூன்றாம் நாள் அவ்விடமிருந்து புறப்படும் போது, ஒரு லிங்கத்தின் அடியில் ஒரு கால் துட்டுக் கிடந்ததை, சுவாமிகள் விளையாட்டுத் தனமாக எடுத்து தன்வசம் வைத்துக் கொண்டார்கள்.

கங்கை உற்பத்தி ஸ்தானத்துக்கு அப்புறமாக யாருமே போக முடியாது. பனி மலையாய் இருப்பதால் மீறியாரும் போவார்களேயானால் மரணம் ஏற்படுவது திண்ணம். சுவாமிகள் அவ்விடம் விட்டுத் திரும்பி வரும் வழியில் இரும்பு போன்ற ஒரு கல்லானது இடது கால் குதியில் பட்டு ரத்தம் வழிந்தது. வலி இன்னவிதமென்று சொல்ல முடியாது. நடக்கவும் மிகவும் கஷ்டமாக இருந்தது. இதுவும் கடவுள் சோதனை தான் என்று எண்ணியதுடன், கங்கை உற்பத்தி ஸ்தானத்திலிருந்து கால்துட்டை எடுத்து வந்ததினால் தான் கடவுள் இவ்வித அவஸ்தையைக் கொடுத்து விட்டாரோ என்று மனதில் விசனம் அடைந்து, தன்னையறியாமல் சிரித்துக் கொண்டு மேற்படி காசை தூக்கி எறிந்து விட்டார்கள். அன்று முதல் சுவாமிகள் கண்ணுக்குத் தென்படக்கூடிய சாமான்களையோ காசு, பணம் வகையறுக்களையோ எடுத்துக் கொள்வதில்லை என முடிவு செய்தார்கள்.

சுவாமிகள் மெதுவாக நடந்து தஞ்சாவூர் ராஜா சத்திரம் வந்து சேர்ந்தார்கள். அங்கு தங்கி ஜெப தவ நிஷ்டை முடித்துக் கொண்டார்கள். அங்குள்ள அன்பர் ஒருவர் கொடுத்த நெய், பருப்பு, மாவு முதலியவைகளை வாங்கி வைத்துக் கொண்டு, மறுநாள் காலையில் தப்பத்துக்குண்டில் ஸ்நானம் செய்து ஜெப தபம் முடித்து விட்டு, அங்கிருந்து புறப்பட்டு கேதாரம் வழியாகச் சென்றார்கள்.

மலைத் தீவிலிருந்து அக்னி தீர்த்தம் வந்து விழும் இடத்துக்குத் தான் தப்பத்துக்குண்டு என்று பெயர். யாத்திரீகர்கள் அதில் தீர்த்தமாடிப்

போவார்கள். சுவாமிகளும் அதில் ஸ்நானம் செய்து மூன்றாம் நாள் புட்ட கேதாரம் வந்து சேர்ந்து, கேதார ஈஸ்வரனை தரிசனம் செய்து ஆத்ம திருப்தி செய்து விட்டு அன்றிரவு அங்கு தங்கி, ஜெப தபம் முடித்து மறுநாள் காலை அங்கிருந்து புறப்பட்டு நவ நாராயணனுக்குச் செல்லும் வழியில் கிராமங்கள் ஒன்றும் இல்லை, எட்டு மைலுக்கு அப்பால் ஒரு கடையும், தீர்த்த வாசிகள் தங்க ஒரு சாவடியும் இருந்தது. அவ்வழியாக சுவாமிகள் செல்லும் போது, கதிரவனும் மறைந்து விட்டான். அந்த இருளில், சாரல் மழையும், பனியும் லேசாக பெய்தது.

வழியும் தெரியவில்லை! அந்த மலை வனத்தில் ஒரு ஆள் மட்டும் தங்கக் கூடிய கல்குகை (புடவு) இருந்தது. அதில் சுவாமிகள் தங்கினார்கள். வேஷ்டி கம்பளி எல்லாம் நனைந்து போனதினால் குளிரைச் சகிக்க முடியவில்லை. கை கால்களின் நரம்புகள் யாவும் இழுத்துக் கொண்டு, வலி பொறுக்க முடியவில்லை. உடனே சுவாமிகள் ஒரு வேஷ்டியை இரண்டாக கிழித்து' நெருப்புப் பற்ற வைத்து, அந்த அணலில் கை, கால்களை வாட்டிப் பார்த்தும் பிரயோஜனப் படவில்லை. எப்படியோ அன்றிரவு அங்கு தங்கி ஜெபம் முடித்து, மறுநாள் காலையில் புறப்பட்டு தர்மம் இருக்கும் இடம் பார்த்து, ஜெப தவம் முடித்து ஆத்ம திருப்தி செய்து கொண்டு தங்கியிருந்தார்கள்.

மறுதினம் பிரயாணப்பட்டு போகும் பொழுது பாதையானது, ஏற்றமும் இறக்கமும் தண்ணீர் நிரம்பியும், ஆக பல தரப்பட்டதாக இருந்தது. அவைகளை எல்லாம் கடந்து, நவ நாராயணன் கோவிலும், அக்னி தீர்த்தமும் இருக்கக் கூடிய இடம் போய்ச் சேர்ந்து, ஆலய தரிசனம் செய்து சத்திரத்தில் தங்கி ஜெப தபம் செய்து முடித்தவுடன், அன்பர் ஒருவர் கொடுத்த பருப்பு மாவு ஆகியவைகளைக் கொண்டு ஆத்ம திருப்தி செய்து முடித்து மூன்றாம் நாள் கேதார ஈஸ்பரன் கோவிலை அடைந்து அங்கு தீர்த்த ஸ்நானம் செய்து, கேதார ஈஸ்பரனை தரிசனம் செய்தார்கள். அங்கு லிங்கம் இல்லை. உயரமான கல் சிலை ஒன்று இருக்கிறது. அதைச் சுற்றிலும் நீர் ஊற்றுக்கள் கிளம்பி வெளியே செல்கிறது. சிரசின் மேல் நெய், அரிசி, பருப்பு வில்வ பத்திரங்கள் முதலானவைகளைக் கொண்டு அர்ச்சித்து தரிசிக்கிறார்கள்.

அவ்விடத்தில் புஷ்பங்கள் எதுவும் கிடையாது. யாத்திரை வாசிகள் 100 மைல்களுக்கு அப்பால் இருந்து பூக்களைக் கொண்டு வந்து சுவாமிக்குச் சாத்தி வணங்குகிறார்கள். பெரும் செல்வந்த சேட்டுகள் அங்கு தங்கியிருந்து

கொண்டு சாதுக்களுக்கு வேண்டிய அனைத்து உதவிகளையும் செய்கிறார்கள். கேதார தரிசனம் செய்து சென்ற வழியே திரும்ப வேண்டும். அதற்கு மேல் யாரும் போக முடியாது. பனிக்கட்டிகள் உறைந்து போயுள்ளது.

அன்றும் மறுநாளும் சுவாமிகள் அங்கு தங்கி இருந்து ஜெப தப நிஷ்டைகள் செய்து முடித்து, மறுநாள் குப்பத்துக் குண்டுக்கு புறப்பட்டுச் செல்லும் வழியில் சவரிகுண்டம் என்ற ஸ்தலம் வந்து சேர்ந்தார்கள். அங்கு ஒரு மலை மீதிருந்து தீர்த்தம் வந்து கௌரி குண்டத்தில் பாய்கிறது. அதில் ஸ்நானம் செய்து ஜெப தபம் முடித்து குப்பத்து காசியை வந்தடைந்து அங்கு இரண்டு நாட்கள் தங்கி ஜெப தபம் முடித்து, மூன்றும் நாள் புறப்பட்டு பத்ரி நாராயணன் கோவில் வந்து தங்கி ஜெப தவம் முடித்து, மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு சத்தி நாராயணன் வந்து ஸ்நானம் முடித்து ஜெப தவம் முடித்து தங்கியிருந்து, மறுநாள் புறப்பட்டு ஹரித் துவாரம் வந்து சேர்ந்து ஜெப தபம் முடித்து மூன்று நாட்கள் அங்கு இருந்து நான்காம் நாள் புறப்பட்டு சாரங்கட்பூர் வந்து, பிறகு குருச் சேத்திரம் வந்து, தாமரைக் குளத்தில் ஸ்நானம் செய்து ஜெப தபம் முடித்தும், பாண்டவர்கள் போர்க்களம், அவர்களுடைய விக்கிரகங்கள் ஆகியவைகளையும் பார்த்து தரிசனம் செய்து, மறுநாள் காலை அங்கிருந்து புறப்பட்டு, டெல்லி மார்க்கமாக யமுனை நதியில் ஸ்நானம் செய்து ஜெப தவம் முடித்து அங்கு தங்கி, மறுநாள் டெல்லியை விட்டுப் புறப்பட்டு அஸ்தினாபுரம் வந்து தங்கி ஜெப தவம் முடித்து சில நாள் அங்கிருத்து, பிறகு பிருந்தாவனம் வந்து ஒரு விருச்சத்து அடியில் இருந்து ஜெப தவம் முடித்து, அங்கிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் கோவில் பின்புறமுள்ள திண்ணையில் தங்கியிருந்து, மறுநாள் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள்.

அப்போது இறைவன் ஓர் சந்யாசி உருவில் சுவாமிகள் முன் தோன்றி காட்சியளித்து மறைந்தார். பிறகு இரண்டு அன்பர்கள் பம்பாய்க்கு ரயில் டிக்கட் எடுத்துக் கொடுத்து சுவாமிகளை அனுப்பி வைத்தார்கள். சுவாமிகள் பம்பாய் வந்து சேர்ந்தார்கள். சில நாள் அங்கு தங்கி புண்ணிய ஸ்தலங்களை தரிசனம் செய்து விட்டு, அங்கிருந்து புறப்பட்டு கோலாப்பூர் வந்து சேர்ந்து, அங்கு ஐராவதம், கிஷ்கிந்தம், கோதாவரி, கன்னடம் இவைகளில் சற்று சற்றுத் தங்கி ஸ்நானம் செய்து தவம் முடித்து பெங்களூர் வந்து அங்குள்ள சுப்ரமணியர் கோவிலிலும் அங்காள ஈஸ்வரி கோவிலிலும் ஜெப தபம் முடித்துவிட்டு அங்குள்ள மடத்தில் ஆறு மாத காலம் தங்கி அன்னக் காவடி எடுத்து சாதம் வாங்கி வந்து, யாத்ரீகர்கள் சந்நியாசிகள் ஆகியவர்களுக்கு அன்னம் படைத்து பிறகு தானும் புசித்து வந்தார்கள்.

பிறகு உரியம் மார்க்கமாகப் புறப்பட்டு கோலார் வந்து சேர்ந்து அங்குள்ள சுப்ரமணியர் ஆலயத்தில் சில நாட்கள் தங்கி ஜெப தபம் முடித்து, சேலம் வந்து சேர்ந்து அவ்விடத்தில் சில நாள் தங்கி ஜெபம் முடித்து, பிறகு நடுக்காவேரி வந்து ஜெப தவம் முடித்து, பின் தர்மபுரிக்கு வந்து அங்கு சில நாட்கள் தங்கி ஜெபதபங்கள் முடித்து, கூடுதுறை வந்து சேர்ந்து சில நாட்கள் தங்கி, ஜெப தவம் முடித்து, நாமக்கல் வழியாக புறப்பட்டு திருச்சிராப்பள்ளி வந்து, காவேரியில் ஸ்நானம் செய்து ஜெப தவம் முடித்து, நதிக்கரையில் சில நாட்கள் தங்கியிருந்து, பிறகு திருவானைக்காவல் அடைந்து சிறிது நாள் அங்கு தங்கி ஜெப தவம் முடித்து, பின் ஸ்ரீரங்கம் வந்து ஸ்ரீ ரெங்கப் பெருமானைத் தரிசனம் செய்து, திருவையாறு சென்று தங்கி ஜெப தபம் முடித்து, மறுதினம் கும்பகோணம் போய்ச் சேர்ந்து, ஸ்ரீ மௌனகுருசுவாமிகள் மடாலயத்தில் சுவாமிகளின், லிங்க தரிசனம் செய்து ஜெப தவம் செய்து கொண்டிருந்தார்கள்.

பிறகு சிதம்பரம் சென்று அங்கு தவம் செய்து திருவிடைமருதூர், திருவாடுதுறை, ஆடுதுறை ஆகிய ஸ்தலங்களில் தங்கி ஜெப தவங்களை முடித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டு, சிதம்பரம், சீர்காழி, பாபநாசம், வைத்தீஸ்வரன் கோவில், மைலம் சுப்ரமணிய சுவாமிகள் ஸ்தலம் ஆகியவைகளை தரிசித்து, ஈரோடு மார்க்கமாய் திருப்பதி போய் தரிசனம் செய்து, ஜெபம் முடித்து மறுநாள் மேலத் திருப்பதிக்கு மலையேறி, வெங்கிடாசலபதியை தரிசனம் செய்து தவம் முடித்துவிட்டு, காலாஸ்திரிக்கு போய் ஜெப தவம் செய்து, கண்ணப்பநாயினர் ஆலயம் சென்று நிஷ்டைகள் செய்து தங்கியிருந்தார்கள்.

பிறகு திருத்தணிகை சென்று ஜெப தவம் முடித்து, திருவண்ணாமலைக்கு செல்லும் வழியில், பாலாற்றில் ஸ்நானம் செய்து ஜெப தவம் முடித்து, பின்பிரயாணமாகி ராயவேலூர் போய், திருவண்ணாமலை வந்தடைந்தார்கள். அங்கு சுவாமிகள் நாற்பது நாட்கள் வரை தங்கி, மலை மேலுள்ள பல தீர்த்தங்களில் நாளொன்றுக்கு ஒரு தீர்த்தம் வீதம் ஸ்நானம் செய்து, ஜெப தவங்களை செய்து வந்தார்கள். கார்த்திகை நட்சத்திரத்தன்று, கார்த்திகை தீப தரிசனம் பார்த்து முடித்து, திருக்கூட்டத்தார்களுடன் சேர்ந்து திருவெண்ணை நல்லூர் வந்து சேர்ந்து, அங்கு பத்து நாட்கள் வரை தங்கி நிஷ்டைகள் புரிந்து வந்தார்கள்.

பிறகு மஞ்சள் குப்பம், கடலூர், புதுச்சேரி, முதலிய ஊர்களில்' ஒவ்வொரு நாள் தங்கி ஜெப தவம் முடித்துவிட்டு, பழனியம்பதிக்கு பிரயாணமாகி கரூர் வந்து, அங்குள்ள மௌனகுருசுவாமிகள் மடாலயத்தில்

தங்கி ஜெப தவம் முடித்து பின், தாராபுரம் சென்று, இரண்டு நாள் தங்கி ஜெபம் முடித்து விட்டு, சின்னத்தாராபுரம் மார்க்கமாக பழனியம்பதியை அடைந்து, வையாபுரிக்குளத்தில் தூய நீரில் ஸ்நானம் செய்து, ஜெப தவம் முடித்துப் புறப்பட்டு உடுமலைப் பேட்டையில் 10 நாட்கள் தங்கி ஜெப தவம் செய்து விட்டு, பின் கொங்கு நாட்டைச் சேர்ந்த திருமூர்த்திமலை ஆலயம் சென்று சுவாமி தரிசனம் செய்து ஜெப தபம் முடித்து, பொள்ளாச்சி மார்க்கமாய் கோயம்புத்தூரை அடைந்து, அங்குள்ள ஆலயங்களை தரிசித்து ஜெப தவம் செய்து கொண்டு தங்கியிருந்தார்கள்.

பின் அங்கிருந்து புறப்பட்டு சுருளி மகாலிங்க தரிசனம் செய்வதற்காக, கன்னிவாடி மார்க்கமாக சுருளிப்பட்டி வந்து சில நாள் தங்கி ஜெப தவம் செய்து கொண்டிருந்துவிட்டு சுருளி மகாலிங்கம் வந்து ஸ்நானம் செய்து, மலை மீதேறி அங்குள்ள பஞ்சாட்சர குகையில் அமர்ந்து ஜெப தவம் முடித்தார்கள். பின் மறுபடியும் சுருளிப் பட்டியை அடைந்து அங்குள்ள மடத்தில் ஜெபம் முடித்து, ஆண்டிபட்டி வந்து ஜெபம் முடித்து பெரியகுளம் வந்து, அங்குள்ள ஓர் தனி மடத்தில் ஜெப தப நிஷ்டைகள் செய்து கொண்டிருந்தார்கள்.

சில நாள் சென்றபின் அவ்வூர் அன்பர் ஒருவர் சுவாமிகளைப் பணிந்து, அவ்வூர் வடகரையிலுள்ள மௌனசுவாமிகள் மடத்துக்கு வரும்படி கேட்டுக் கொண்டார். அதன்படி சுவாமிகளும் அந்த மடாலயத்துக்கு போய், பெரியகுளம் சுவாமிகள் சொன்னபடி ஒரு தனி அறையில் தங்கி ஜெப தவம் செய்து கொண்டு ஆறுமாத காலம் நித்திய கால கர்மம் முடித்தார்கள். ஒரு நாள் கடவுள் இராமேஸ்வரம் யாத்திரை செல்லும்படி உத்தரவிட்டார்கள். ஆண்டவன் உத்தரவுப்படி இராமேஸ்வரம் செல்ல பிரயாணப்பட்டு நிலக்கோட்டை மார்க்கமாய், சல்லக்குளம் வந்து சங்கு சாமி என்பவர் இருக்கும் மடத்திற்கு வந்து தங்கி ஆறுமாத காலம் ஜெப தப நிஷ்டைகள் செய்து கொண்டிருந்தார்கள். அந்த ஊர் சிறிய கிராமம் அங்குள்ள அன்னக்காவடி மூலமாக சாதம் எடுத்து வந்து அடியார்களுக்கு படைப்பதுண்டு.

மேற்படி சல்லக்குளத்துக்கும் வடபுறம் பெருமான்பட்டி என்ற கிராமம் ஒன்றுள்ளது. அவ்வூரிலிருந்து கழுவத்தேவர் என்பவர் காவலுக்காக சல்லக்குளத்துக்கு தினமும் வருவார். அவரும் சாதம் கொண்டு வந்து சுவாமிகளுக்குக் கொடுப்பார். ஆறுமாதங்களுக்குப் பிறகு சுவாமிகள் இராமேஸ்வரம் பிரயாணமாகும் போது அவ்வூர் அன்பர் மூக்கபண்டாரம்

என்பவர், சுவாமிகளுக்குப் பணம் கொடுத்து பாதம் பணிந்து அனுப்பி வைத்தார்.

சுவாமிகள் வாடிப்பட்டி ரயில் நிலையத்தில் பிரயாணச் சீட்டுப் பெற்று, மதுரையம்பதிக்கு வந்து புட்டுத்தோப்பு மடம் சென்று வைகை நதியில் ஸ்நானம் செய்து ஜெப தபம் முடித்து, மாரியம்மன் தைப்பூசத் தெப்ப உற்சவம் பார்த்தும், ஸ்ரீ மீனாட்சியம்பிகை, சோமசுந் ரேஸ்வரர், இன்னும் பல ஆலயங்களையும் தரிசனம் செய்து ஜெபம் முடித்துக் கொண்டு, சிறிது நாள் புட்டுத்தோப்பு மடத்தில் தங்கியிருந்தார்கள். பிறகு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு இராமேஸ்வரம் செல்லும் வழியிலுள்ள பல ஆலயங்களையும் தரிசனம் செய்து கொண்டு. ஸ்ரீ ராமபிரான் லிங்கப் பிரதிஷ்டை செய்த இராமேஸ்வரம் செல்லும் வழியிலுள்ள பல ஆலயங்களையும் தரிசனம் செய்து கொண்டு, ஸ்ரீ ராமபிரான் லிங்க பிரதிஷ்டை செய்த இராமேஸ்வரம் வந்து லெக்ஷ்மண தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து லிங்கப் பிரதக்ஷணம் செய்து ஜெபம் முடித்து, தனுஷ்கோடி போய்ச் சேர்ந்து ஜெப தவம் முடித்து, மறுநாள் பாம்பன் வந்து தங்கி ஜெபம் முடித்து, இராமனுதபுரம் வந்தடைந்து, தாமரைத் தடாகத்தில் ஸ்நானம் செய்து தாயுமானவர் மடாலயம் போய்ச் சேர்ந்து, அங்குள்ள விக்கிரகங்களை தரிசனம் செய்து ஜெபம் முடித்து இருந்தார்கள்.

மறுநாள் காலை அங்கிருந்து புறப்பட்டு மதுரை வந்து, புட்டுத் தோப்பு மடத்தில் தங்கி ஜெபம் முடித்து திருவேடகம் வந்து ஏடகநாதனை தரிசனம் செய்து, சட்டநாதன் மடாலயம் வந்து தங்கி ஜெப தபம் முடித்தார்கள். மறுநாள் காலையில் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு மறுபடியும் சல்லக்குளம் வந்து சங்குச் சுவாமிகள் மடத்தில் தங்கி ஜெப தபம் செய்து கொண்டிருந்தார்கள். அங்கு தங்கியிருப்பதை எப்படியோ அறிந்த சுவாமிகளின் மூத்த சகோதரர் சல்லக்குளம் வந்து சுவாமிகளைப் பாதம் பணிந்து, பி.புத்தூருக்கு வரவேண்டும் என்று அழைத்தார்கள். அதற்கு சுவாமிகள் வரமுடியாதென்று மறுக்க, அவர் அங்குள்ள பெரியவர்களிடம் முறையிடவே, அப்பெரியவர்கள் யாவரும், ஊருக்குப் போகும்படி சுவாமி-களை மிகவும் வேண்டிக் கொண்டு பாதம் பணிந்தார்கள்.

பெரியோர்களுடைய வேண்டுகோளுக்கு சுவாமிகள் ஒப்பு கொண்டு தனது சகோதரருடன் புறப்பட்டு பி.புத்தூர் சென்று அங்குள்ள மடத்தில் பதினைந்து நாட்கள் தங்கியிருந்து ஜெப தபம் முடித்து பதினாறுவது நாள் அதை விட்டு பிரயாணப்பட்டார்கள். அப்பொழுது சுவாமிகளின் மாதா ஸ்ரீ முத்து தேவியாரவர்கள், இங்குள்ள மடத்திலேயே இருக்க

வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு சுவாமிகள் ''யாதும் ஊரே யாவரும் கேளீர்'' என்று கூறி தாயார் கூறியதை மறுத்து விட்டு புறப்பட ஆயுத்த மானார்கள். அதன்பின் சுவாமிகளுக்கு சிலவுக்கு பணம் கொடுத்து பாதம் பணிந்தார்கள்.

பிறகு சுவாமிகள் அவ்வூரைவிட்டுப் புறப்பட்டு திருப்பரங்குன்றம் வந்து கார்த்திகை தரிசனம் செய்து அங்கு தங்கி ஜெபம் முடித்து, மறுநாள் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, சல்லக்குளம் வந்து அங்கு கொஞ்ச நாள் தங்கி ஜெப தபங்கள் முடித்து பின் பெரியகுளம் சென்று மௌனகுருநாத சுவாமி மடத்தில் எப்போதும் போல் தங்கி ஜெப தப நிஷ்டைகள் செய்து கொண்டிருந்தார்கள்.

சில நாள் சென்றதும் சல்லக்குளம் சங்கு சுவாமிகள் வண்டி ஒன்று தயார் செய்து ஓட்டிக் கொண்டு பெரியகுளம் மௌன சுவாமிகள் மடத்திற்கு வந்து சுவாமிகளை, சல்லக்குளம் வரவேண்டுமென்று அழைத்தார்கள். சுவாமிகளும் அவருடைய அழைப்பை ஏற்று, அங்குள்ள சுவாமிகளிடம் உத்திரவு பெற்று, வண்டி ஏறி சல்லக்குளம் வந்து சேர்ந்து, சதாகாலமும் ஜெப தப நிஷ்டைகள் செய்து கொண்டிருந்தார்கள். அவ்வூரிலுள்ள அன்பர் நல்லபண்டாரம் என்பவரின் அன்புப் பத்தினியார், லெக்ஷ்மி அம்மையார், சுவாமிகள் மனம் கோணாமல், அன்புடன் ஆகாரம் கொடுத்து உதவி செய்து வந்தார்கள். அங்கு எட்டு மாத காலம் ஜெப தப நிஷ்டை புரிந்தார்கள். ஓர் நாள் சுவாமிகள் நிஷ்டையிலிருக்கும் போது பார்வதி பரமேஸ்வர பராபரக் கடவுள், விண்ணுக்கும் மண்ணுக்கும் ஆயிரங்கோடி ஆதித்தன் உதயமானூர்ப் போல், ஏக பர வெளிச்சமாய், சுவாமிகள் முன் தோன்றி கூறியதாவது, ''நீ யாத்திரை சுற்றியது போதும், இனி மலை வனங்களில் தவம் செய்து வந்தால், நீ விரும்பும் உபதேசம் தந்து அருள் புரிவோம்.'' என்று கூறி மறைந்தார்கள்.

சுவாமிகள் முன்பு மோர்மானிலிருக்கும் போது சந்நியாசி உருவில் தரிசனம் தரிசனம் தந்து ''நீ யாத்திரை சுற்றி வருவாயானால் உனக்கு குரு உபதேசம் ஞான உபதேசம், பிரம்ம உபதேசம் தருகிறோம்'' என்று கூறிய நாள் முதல் இன்று வரை சுவாமிகள் ஒரே பக்தி வைராக்கியம் கொண்டு, சதாகாலமும் கடவுளை மறவாமல் மனதிலிருத்தி உள்ளமுருக சிவத்தியானம் செய்து வந்தார்கள்.

சல்லக்குளத்திலிருக்கும் போது கடவுள் தோன்றி தவத்திற்குப் போகும்படி உத்திரவு கொடுத்தபடியால், பிங்கள ஃ வைகாசி மீ 14ம்

நாள் புதன்கிழமை (23-5-1917) சுவாமிகள் தவம் செய்ய நிச்சயித்து, வடக்கு நோக்கிப் புறப்பட்டார்கள். பெருமாள் பட்டிக்கு வடமேற்குப் பக்கத்தில் ஒரு சிறு குன்றும், இருள்சூழ்ந்த விருஷக ஜாதிகளும் உள்ள ஒரு வனம் தோன்றியது. அங்கே உள்ளே புகுந்து பார்த்த போது, துருசு மலை ஐயனார், சந்தனக் கருப்பன், கன்னிமார் என்று மூன்று ஆலயங்கள் இருந்தன. அக்கோவில்களைச் சுற்றிலும் ஆள் விலகக் கூட சிறிதும் இடம் இல்லாமல், சப்பாத்திக் கள்ளிகளும், வனமுமாக இருள் சூழ்ந்திருந்து.

சுவாமிகளும், அந்த கள்ளிகளைச் சற்று விலக்கி, ஒரு வேப்ப மரத்தடியில் சிறிது இடம் துப்புறவு செய்து, தனது ஆசனத்தை விரித்து உட்கார்ந்து இனி யாத்திரை சுற்றுவது பிரயோஜனமில்லை என்று எண்ணி

''இன்று வருமோ நாளைக்கே வருமோ அல்லது மற்று
என்று வருமோ அறியேன் யெங்கோவே - துன்றுபல
வெம்மாயை யற்று வெளிக்குள் வெளி கடந்து
சும்மா இருக்கும் சுகம்'' (அருட்பா)

''நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்குக் கேடில்லை'' (திருமூலர்)

',மேலை யண்ணாவில் விரைந்து இரு காலிடில்
காலனுமில்லை கதவுந் திறந்திடும்
ஞாலம் அறிய நரை திறை மாறிடும்
பாலனும் ஆவான் பராநந்தி ஆனையே (திருமந்திரம்)

''ஆடாதீர் சற்றும் அசையாதீர் வேறொன்றை
நாடாதீர் பொய் யுலகை நம்பாதீர்'' (அருட்பா)

''அய்யனே எனதுள்ளே நின்று எனது சென்மங்களாண்ட
மெய்யனே உபதேசிக்க வெளிவந்தகுருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோருதவி நாயேன்
செய்யவே றொன்றுங் காணேன் திருவடி போற்றி போற்றி''
(கைவல்யம்)

''நன்னாலுங் கடந்தே உயர் ஞான சபாபதியே
பொன்னாருஞ் சடையாய் அருட்பூரண புண்ணியனே
என்னாலாவ தொன்றும் உனக்கில்லை யெனினும் எந்தாய்
உன்னால் வாழுகின்றேன் எனக்குண்மையை - உரைத்தருளே''

''ஓடியோடி ஓடியோடி உட்கலந்த ஜோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களும் கழிந்து போய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மானிடர்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே''
(சிவவாக்கியம்)

''கடை வாசலைக் கட்டிக் காலை எழுப்பி
இடை வாசல் நோக்கி இனிதுஉள் இருத்தி
மடை வாயில் கொக்குப் போல் வந்திருப்பார்க்கு
உடை யாமல் ஊழி இருக்கலுமாமே'' (திருமூலர்)

''எண்சாண் உயரத்து இருக்கும் பணங்களை
இறக்கி உண்ணேன் மனக்கண்ணே - கெட்ட
கஞ்சாவுங் கள்ளும் அபினி நீ
கலந்து குடிப்பதை விடு அண்ணே'' (குனங்குடி மஸ்தான்

என்றெல்லாம் யோக நூல்கள் கூறும் அனுபவத்தை நாமுஞ் சாதனை செய்து அனுபவிக்க வேண்டுமென எண்ணி சுவாமிகள் அவ்விடத்தில் பாடிக் கொண்டிருக்கும் போது,

பெருமாள் பட்டியைச் சேர்ந்த பழ. ராமசாமி பிள்ளை, சுந்தரவேளார் விட்டிசூரியத் தேவர், கழுவத்தேவர், இன்னும் சிலருடன், பால், பழம் தேங்காய், தாம்பூலம், சூடம், பத்தி ஆகியவைகளை சுவாமிகள் முன் வைத்து ஸ்ரீ பராபரக்கடவுளுக்கு அற்புதமாக சூட ஆராதனைகள் செய்வித்து சுவாமிகளுக்குப் பால், பழம் கொடுத்துப் பாதம் பணிந்து அவரவர்கள் இருப்பிடம் சென்றார்கள். ப லவனும் மறைந்தான். இருள் சூழ்ந்தது சுவாமிகள் அன்றிரவு ஜெப தவம் முடித்துத் தங்கியிருந்தார்கள்.

மறுநாள் விடிந்தது. அது பிங்கள ஆண்டு வைகாசித் திங்கள் 15 ம் நாள் வியாழக்கிழமை (30-5-1917) ராமசாமி பிள்ளை, சுவாமிகளின் விபரத்தை தனது தந்தை பழ யாண்டி பிள்ளையிடம் கூறியிருப்பார் போலும் பழனியாண்டிபிள்ளையும் கூலி ஆட்கள் சிலரை சுவாமிகள் இருக்குமிடம் கூட்டிவந்து சுவாமிகளைச் சுற்றியுள்ள சப்பாத்திக்கள்ளி முட்புதர்களை வெட்டி சுத்தம் செய்து, ஜனங்கள் தாராளமாக வந்து சுவாமிகளைத் தரிசனம் செய்ய வசதிகள் செய்து கொடுத்தார்.

பிறகு அன்பர்கள் விருட்ச நிழலில் தாராளமாகத் தங்கி, சுவாமிகளைத் தரிசிக்கவும், போக வரவும் நல்ல வசதியாக இருந்தது, அது சமயம் பெருமாள் பட்டியிலிருந்து மெய்யன்பர்களாகிய நாட்டாண்மை விட்டிசூரியத் தேவர் வெள்ளைச்சாமித் தேவர், பூசாரி சின்னச்சாமி வேளார் பழ.கருப்பையா பிள்ளை, முக்குளி என்ற பெரியகருப்பன் சேர்வை வயிரவமணியம். சின்னச்சாமி சேர்வை, கழுவத்தேவர், ஆகியவர்கள் அவ்வூரின் பல அன்பர்களுடன் வந்து சுவாமிகளுக்கு தூப, தீப, நைவேத்தியம் செய்து சுவாமிகளுக்கு பால் பழம் கொடுத்துப் பாதம் பணிந்தார்கள்.

சுவாமிகள் அவர்களைப் பார்த்து ''மெய்யன்பர்களே! உங்கள் கிராமம் இன்று முதல் சகல வளமும் பெற்று மக்கள் யாவரும் பக்தியில் சிறப்படைவார்கள். உங்கள் கிராம எல்கையில் இராட்சச எந்திரங்கள் நிறுவப்பட்டு சில ஆலைகள் தோன்றும். உங்கள் கிராம மக்கள் செல்வச் செழிப்புடன் திகழுவார்கள். இது ஸ்ரீ பராபரக் கடவுளின் உத்திரவுப்படி கூறப்பட்டது. நம்புங்கள், நம்புங்கள் சத்தியம் சத்தியம்'' என்று அருள் கூர்ந்தார்.

''சமயத் தொண்டர்களால் சன்மார்க்க நெறிமுறைகள்
சார்ந்தோங்கும் பெருமாள் நகரம்
இமயமென உயர்ந்திட்ட இயந்திர சாதனங்கள்
எழிலுடனமையும் நகரம்
எமையெல்லாம் காக்கும் என்துருசுமலை அய்யன்
ஏற்றமுடன் வாழும் நகரம்
உமையாள் மீதாணையாக உரைக்கின்றேன் ஜகத்தீரே
உலகினில் இந்நகர்க்கீடு இணையேதுமிலையே''

(புத்தூர் மௌன குரு)

''சித்தரும் முத்தரும் மெத்த மதித்திடுஞ் சிங்காரமான நகர்
செந்நெல்லொடு, கரும்பு, மா, பலா, வாழை செழிப்பாக
- ஓங்கு நகர்
அத்த ரொடு பன்னீர் பத்தி கற்பூர வாடை அந்தி சந்தி
- வீசும் நகர்
அடியார்கள் சாதுக்கள் அரும்பசி யாற்றிடு மன்பர் மிகுந்த நகர்
சத்தியாம் பகவதி, முத்தாளம்மை ஐயனுருடன் தங்கும் ஒய்யார
- நகர்
சகலவுயிர்களையும் தம்முயிர் போல் பாவிக்கும் சன்மார்க்கி வாழுநகர்

இத்தரை மீதினில் பெருமாள் நகர்க்கு இணை ஈரேழு
- முலகுலும் இல்லையே''
(பு. மௌன குரு)

என்று சுவாமிகள் பாடி முடித்து அன்பர்கள் முன்னிலையில் கூறியதாவது, ''மெய்யன்பர்களே சுவாமிகள் இன்று முதல் (48) நாற்பத்தெட்டு நாட்கள் இந்த இடத்தில் வீரத்தவம் செய்யப்போகிறேன். இன்று முதல் என் ஆயுள் பரியந்தம் மௌனம், கலகநாஸ்தி, பேசப் பேச பிழை என்ற ஆன்றோர் வாக்குப்படி, வாய் பேசுவதில்லை, அரும்பசி ஏற்பட்டு ஆவியே போகும் நிலை ஏற்படினும், எனது கையால் ஆகாரத்தை எடுத்துப் புசிப்பதில், பணம் பாஷாணம் என்ற பெரியோர் மொழிக்கிணங்க காசு பணத்தை எனது கரத்தால் தொடுவதுமில்லை என்றும், அன்பர்கள் பகல் நேரத்தில் இங்கு வரலாம் ஆனல் சூரிய அஸ்தமனம் ஆனதும் அவரவர் இருப்பிடம் சென்று விட வேண்டுமென்றும், இனிமேல் பேசுபவர்களுக்கு சுவாமிகள் எழுத்து மூலம் பதிலளிப்பார்கள்'' என்று அங்கிருந்த அனைவரிடமும் கூறி ஆசனமிட்டு உத்தரவு திசையை நோக்கி உட்கார்ந்து தவத்தில் அமர்ந்தார்கள் கதிரவனும் மறைந்தான். அன்பர்கள் யாவரும் தத்தம் இருப்பிடம் சென்ருர்கள்

இவ்விதமாக சுவாமிகள் தானுய் தனியாய் ஏகமாய் மௌனம் சாதித்து சிவ தியான நிஷ்டை புரிந்து கொண்டிருக்கும் போது, இரவு சுமார் இரண்டு மணிக்கு ஸ்ரீ ஹரி ராம கிருஷ்ண, பார்வதி பரமேஸ்வர பராபரக்கடவுள் மௌன சுவாமிகள் உந்தியில் உதித்து, ஏக பர வெளிச்சமாய், பிரகாசமாய், ஜோதியாய், மானிட உருவமாய் முன் நின்று சுவாமிகளுக்கு உபதேசம் தந்த விபரமாவது.

## 1. முதலாவது குரு உபதேசம் (பக்தியோகம்)

ஓம் ஹரி ராம கிருஷ்ண பார்வதி பரமேஸ்பர பராபரக் கடவுளே, உன் பாதாரம் கெதி, என் உடல் பொருள் ஆவி மூன்றும், உனக்குத் தெத்தம், ஜெனன முதல், சரீர பரியந்தம் அன்றாடம் செய்கின்ற பாவ புண்ணிய கிரகதோஷம் எல்லாம் உன் செயலே செயல், என் செயலாவது இனி ஒன்றுமேயில்லை. ஓம் குரு பாதம் சிரசுமேற் கொண்டேன். ஈசா உன்பாதம் சிரசின்மேற்கொண்டேன். ஈகையும், செல்வமும், சித்தியும், முத்தியும் தந்து ரக்ஷித்து அருள்புரிவாய், கிருபையை ஊட்டுவாய் ஞானத்தைப் புகட்டுவாய், முழு சித்தத்தையும் என் உள்ளத்தில் நாட்டுவாய்

ஓம் சர்வ வசி குரு ரக்ஷிக்க ஓம் சிவாய நம
ஓம் சர்வ வசி குரு ரக்ஷிக்க
ஓம் சிவாய நம
ஓம் சர்வ வசி குரு ரக்ஷிக்க
ஓம் சிவாய நம
ஓம் சிவாய நம
ஓம் சிவாய நம
என்று ஜெபிக்கும்படியும்.

## 2. இரண்டாவது ஞான உபதேசம் -சித்தயோகம்

ஓம் சர்வ சித்தி பிரம்ம ஞானம் சத்தியும் சிவமும் சடுதியில் வந்து, சித்தியும், முத்தியும் தந்து ரக்ஷிக்க அருள் புரிவாய்
ஓம் சிவாய நம
ஓம் சிவாய நம
ஓம் சிவாய நம
என்று ஜெபிக்கும்படியும்.

## 3. மூன்றாவது பிரம்ம உபதேசம் -சாந்தி யோகம்

ஓம் சத்சித் சுத்த பிரம்ம ஐக்கியம்
ஓம் சாந்தி சாந்தி சத்சத்
ஓம் சாந்தி சாந்தி சத்சத்
ஓம் சாந்தி சாந்தி சத்சத்
ஓம் பரப் பிரம்மனே நமஹ

என்று ஜெபித்து நிஷ்டை புரியும் படியும் பரமாத்மாவாகிய பராபரக் கடவுள் உபதேசம் தந்து ரக்ஷித்து, சுவாமிகள் உள்ளத்தில் புகுந்து கொண்டார்கள். மௌனகுரு சுவாமிகளும், அதே உபதேச வாக்கியங்களை சத்தியமாக நம்பி நித்தியம் தவறாமல் நிஷ்டை கூடி ரேசக, பூரக, கும்பகம் செய்து ஜெப தபங்களைச் செய்து கொண்டிருந்தார்கள்.

மறுநாள் காலை பகலவன் உதித்தான். அப்போது பெருமாள் பட்டியிலிருந்து கூழுத்தேவர் என்ற அன்பர் வந்து சூட தீபாராதனை செய்து சுவாமிகளுக்கு பால் பழம் புகட்டி விட்டுச் சென்றார்.

பிறகு சுவாமிகள் தவத்திலிருப்பதை ஆங்காங்கு கேள்விப்பட்ட அன்பர்கள் கூட்டம் கூட்டமாக, ஆடவரும், மகளிர்களும் பால் பழம் சூடம் பத்தியுடன் வந்து ஆராதனைகள் செய்து பாதம் பணிந்து போவதும் வருவதுமாக இருந்தார்கள். மௌனகுருநாத சுவாமிகள் தவம் புரிவது பிரபலமாகி, திருநெல்வேலி, சென்னை முதலிய இடங்களிலிருந்தும் தரிசிக்க வருபவர்களும், வரம் வேண்டி வருபவர்களும், கும்பல் கும்பலாக, நூறு, ஆயிரக்கணக்காய் பால், பழம், புஸ்பம், தேங்காய், சூடம், தாம்பூலம்' பத்தி ஆகியவைகளுடன் வந்து பாதம் பணிந்து தீபாராதனை நடத்தி குருநாதனுக்கு பால் பழம் புகட்டி, நமஸ்கரித்து அவரவர்கள் கோரிய விஷயங்களைக் கூறி ஆசி பெற்று செல்வார்கள். அன்பர்கள் அவரவர்கள் கோரியபடி காரியங்கள் சித்தியாகி காணிக்கைகள் செலுத்தி விட்டுப் போவதும், காரியங்களை கோரி வருவதுமாக மக்கள் கூட்டம் நிரம்பிக் கொண்டிருந்தது. பல நாட்களாக அவதிப்பட்ட நோயாளிகளும்' தீராத பிணியாளர்களும், சுவாமிகளிடம் வந்து விபூதி பிரசாதம் பெற்றுச் செல்வதும், நோயாளிகளுக்கு அது எப்படிப்பட்ட வியாதியானாலும் சரி இரண்டு, மூன்று நாட்களிலேயே பூரண குணமாவதும், அவரவர் கோரும் காரியங்கள் யாவும் கை கூடுவதும் அவரவர்கள், காணிக்கைகளை தாமாகவே செலுத்தி சுவாமிகளைப் பாதம் பணிந்து அளவற்ற சந்தோஷங் கொண்டு செல்வதுமாக இருந்தார்கள்.

இவ்விதமாக சுவாமிகள் ஜெப தப நிஷ்டை கூடி நாற்பத்தி எட்டு நாட்கள் நடத்தி கொண்டிருந்தார்கள். அது சமயம் பெருமாள்பட்டி மெய்யன்பர்கள் நாட்டாண்மை வெள்ளைச்சாமித் தேவர், உ. பழ. கருப்பையாபிள்ளைகளான நாட்டாண்மை வெள்ளைச்சாமித் தேவர், உ. பழ. கருப்பையாபிள்ளை கிராம முன்சீப் அ. விட்டிசூரியத் தேவர். பூசாரி சின்னச்சாமி வேளார் முக்குளி சேர்வை, வயிரவமணியம் மு. சின்னச்சாமி சேர்வை கழுவத்தேவர், கூழுத்தேவர், மருதமுத்து சேர்வை ஆறுமுகம் செட்டியார் ஆகியவர்கள் இன்னும் பல அன்பர்களுடன் சேர்ந்து வந்து சுவாமிகளின் பாதம் பணிந்து ஆராதனை செய்து வேண்டிக் கொண்டதாவது.

"மௌனகுருநாதா, தாங்கள் தவம் முடிந்ததும் எங்கள் பெருமாள் பட்டிக்கு எழுந்தருளி அங்கு தங்க வேண்டும் எங்களுக்கு அதற்கான உத்தரவு கொடுக்க வேண்டிக் கொள்கிறோம் என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கு சுவாமிகள், நீங்கள் சுவாமிகளை உங்கள் ஊரில் வைத்துப் பக்தி சிரத்தையுடன் கடைசிவரை நிலை நிறுத்தி தர்மம் நடத்துவது உண்மையானால், உங்கள் ஊர் மந்தையில் உள்ள பஜனை மடத்தின் தென்புறம், சுவாமிகள் ஜெப தப நிஷ்டை செய்வதற்கு ஒரு ஆஸ்ரமம்

அமைத்து அதைச் சுற்றிலும் பந்தல் போட்டு குருபூஜை நடத்துவதற்கான அரிசி, பருப்பு காய்கறிகள் மசாலேச் சாமான்களும், பூஜை நடத்துவதற்கான மணி தூபக்கால், ஐந்தடுக்கு தீபம் ஐந்துமுக சூடகவசம் சூடத்தட்டு பெரியபித்தளேத் தாம்பாளம் சிறுபித்தளேத் தாம்பாளங்கள், குத்துவிளக்கு-கள் அபிஷேகச் செம்பு தாமிரத்தாலான உரிண்டைச் செம்பு பொங்கல் சருவம் கரண்டி ஆகியவைகளேயும் வாங்கி வைக்க வேணுமென்று எழுத்து மூலமாக உத்தரவு கொடுத்தார்கள். அவ்வுத்திரவுபப்டியே முடித்துக் கொடுப்பதாக சுவாமிகளிடம் வாக்குறுதி கொடுத்து தத்தம் இருப்பிடம் அடைந்தார்கள். ரவியும் மறைந்தான்.

மறுநாள் காலையில் அருணன் உதயமானவுடன பெருமாள்பட்டி முக்கியஸ்தர்களான மேற்படி மெய்யன்பர்கள் வீட்டு வாரியாக வரிப் போட்டு வசூல் செய்து சுவாமிகள் உத்திரவுப் படியே தவச்சாலே அமைத்து பொங்கலுக்கான அரிசி மற்றவைகளேயும் தயாரித்துத் கொண்டு பூஜைக்கான மணி வகையருக்களை வாங்கி வருவதற்காக, தேனூர் நீலமேகம்மணியம் என்பவர்வசம், உண்டியலில் சேர்ந்த ரூபாய் (33) முப்பத்தி மூன்றையும், கொடுத்து மதுரைக்கு அனுப்பி வைத்தார்கள்.

மதுரைக்குச் சென்ற நீலமேகம்மணியமும் ஒரு பாத்திரக்கடைக்குச் சென்று சுவாமிகள் உத்திரவுபடி பூஜைக்கான மணி பாத்திரங்கள் வாங்கி, அச்சாமான்கள் யாவற்றிலும் பெருமாள்பட்டி மௌன குரு சுவாமிகள் மடாலயம் 16-7-1917 என்று பெயர் வெட்டி கொண்டு, கிரயம் பார்க்கும் பொழுது மொத்தம் (ரூ 56) ஐம்பத்தாறு ரூபாய் ஆகி விட்டது. நீலமேகம்மணியமும் தன்னிடமிருந்த ரூபாய் முப் த்தி மூன்றையும் கொடுத்து பாத்திரங்களைக் கேட்க, கடைக்காரரும் ரூபாய் ஐம்பத்தாறையும் கொடுத்தால் தான் பாத்திரங்களை கொடுக்க முடியும் என்று கூறி மறுத்து விட்டார், உடன் நீலமேகமணியமும் சுவாமிகளிடம் வந்து, மதுரையில் நடந்த நிகழ்ச்சிகளை கூறினுர். சுவாமிகளும் நீலமேகம் மணியத்திடம் மறுபடியும் நீங்கள் மதுரைக்குப் போய் கடைக் காரரிடம் சுவாமிகளின் பெயரைச் சொல்லி இன்னும் (8) எட்டு நாளில் பாக்கிப்ப ம் வந்து சேரும் என்று கூறுங்கள் மறுப்புச் சொல்லாமல் சாமான்களேக் கொடுப்பார், வாங்கி வாருங்கள்'' என்று சுவாமிகள் சொல்லி-யபடி கடைக்காரரிடம் போய் சொல்ல மறுப்பேதும் சொல்லாமல் சாமான்-களைக் கொடுத்தனுப்பினுர்.

பூஜை சாமான்களைப் பெற்றுக்கொண்டு, அன்பர் நீலமேகம் மணியமும், சுவாமிகள் நிஷ்டை புரிநது கொண்டிருந்த, துருசுமலே ஐயன்

-பதிக்கு வந்து சேர்ந்தார். அப்போது பெருமாள்பட்டி அன்பர்கள் புஷ்பப் பல்லக்கு தயார் செய்து வைத்திருந்தார்கள். கடவுள் உத்தரவுப்படி (48) நாற்பத்தெட்டு நாள் கடுந்தவம் நிஷ்டை பூர்த்தியாகி விட்டது.

பிங்கள ஆண்டு ஆடித்திங்கள் மூன்றும் நாள் பெருமாள்பட்டி சாணும்பட்டி, சல்லக்குளம் முதலிய ஊர்களிலுள்ள சகல அன்பர்களும். மாதுசிரோன்மணிகளும் மாணவ மாணவிகளும் ஒன்றாய் கூடியிருந்தார்கள். சத்திரப்பட்டி அன்பர் சுப்பையா வேளார் என்பவரால் தீர்த்தம், நல்ல எண்ணை திருமஞ்சனம், எலுமிச்சம்பழம் இளநீர் தேன், பால், தயிர் பஞ்சாமிர்தம், சந்தனம், விபூதி அத்தர் புனுகு, ஜவ்வாது நெய், கோமியம் ஆகியவைகளால் பாதபூஜை செய்விக்கப்பட்டு, தேங்காய், பழம், பொங்கல், கனிவர்க்கங்களைப் படைத்து மேள, தாள, தேவ துந்துபி முழங்க, துருமலை ஐயனூர்பதியிலும் அபிஷேக அர்ச்சனைகள் செய்தும், பல ஊர்களில் இருந்து வந்த பக்தி கோடிகளும் சுவாமிகளைப் பாதம் பணிந்து, நமஸ்கரித்து, ''அரோகரா,'' சிவ சிவா, மஹாதேவா ஸ்ரீ மௌனாநந்த பரமசற்குருவே நமஹ! எனப் போற்றி செய்து சுவாமிகளுக்குப் பொங்கல், பழம், பால், பஞ்சாமிர்தம் ஆகியவைகளை ஊட்டுவித்துப் பின் பக்தகோடிகள் அனைவருக்கும் விபூதி பிரசாதம் கொடுத்து ஆனவுடன், சுவாமிளைப் புஷ்பப் பல்லக்கில் எழுந்தருளச் செய்து:

ஸ்ரீ ஹரி ராமகிருஷ்ணபார்வதி பரமேஸ்வர பராபரக் கடவுள் அருளால் முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷீஸ் -வரர்கள், கின்னரர், கிம்புருவர், சித்த வித்தியாதரர்கள், துருசுமலை ஐயன், சந்தனக்கருப்பன் கன்னிமார்கள், ஆகியோர்கள் ஆசி கூற, வானவேடிக்கை ஆகாயம் அதிரும்படி முழங்க மேள தாள நாதஸ்வர கச்சேரி எட்டுத்திக்கும் சப்திக்க, தேவதுந்துபி, ஆடல் பாடல், சிலம்பம் கரக ஆட்டத்துடனும் பக்த குழாத்துடனும். சுவாமிகள் அமர்ந்த புஷ்பப்பல்லக்கு, சல்லக்குளம், பெருமாள் பட்டி வீதிகளில் பவனி வந்தது. வீடுகள் தோறும், தேங்காய் பழம் புஸ்பம் கொண்டு சுவாமிகளுக்கு ஆராதனை செய்தார்கள் சுவாமிகளும் பக்தகோடிகளுக்கு நல்லாசி கூறினார்கள். சுவாமிகள் உத்தரவுப்படி நிர்மாணிக்கப்பட்ட ஆசிரமத்தில் சுவாமிகளை அமரச்செய்து, அன்பர்கள் யாவரும் சுவாமிகளின் பாதம்பணிந்து ஆசி பெற்று அவரவர் இல்லம் ஏகினர்.

''சித்தம் குடி கொண்டு சின்மயமும் தானாகி
சிவனே தாமென எழுந்தார்
புத்தூர் பரப்பிரம்ம மௌனானந்தம் - அவர்தம்
பொற்பாதம் போற்றி போற்றி. (வெள்ளிமலை)

மறுநாள் ஆடித்திங்கள் 4ம் நாள் காலை 7 மணியளவில் சுவாமி-களுக்கு மாலை அணிவித்து சர்க்கரை படைத்து சூட தீபாராதனை நடத்தி வந்திருக்கும் பக்தர்களுக்கு விபூதி, சர்க்கரை வழங்கப்பட்டது அதைப் போலவே அன்று மாலை 6 மணிக்கும் நடைப்பெற்றது. அன்று ஆரம்பித்த பூஜை இன்று வரை அது போலவே இடைவிடாது நடைபெற்று வருகிறது. வெள்ளிக்கிழமை தோறும் பொங்கல் படைத்து விஷேச பூஜை நடைபெறும்.

பெருமாள்பட்டியில் பழ. கருப்பையா பிள்ளை, ப . நாகசாமிபிள்ளை பழ. ராமசாமி பிள்ளை ஆகிய மூன்று சகோதரர்கள் செல்வச் செழிப்புடன் ஏக குடும்பமாக இருந்து வந்தார்கள். சுவாமிகள் பெருமாள்பட்டி ஆசிர-மத்தில் எழுந்தருளிய நாள் முதல் அவர்கள் ஜீவமுக்தி அடையும் நாள் வரை மேற்கண்ட சகோதரர்களின் குடும்பத்திலிருந்து ஆகாரம் கொண்டு வந்து, சுவாமிகளுக்கு ஊட்டுவித்து சுவாமிகள் புசித்து முடிந்த பின் சுவாமிகளின் வாயைக் கழுவி, சுத்தமான துண்டுத்துணியால் வாயைத் துடைத்து விட்டுச் செல்வார்கள்.

ஏற்கெனவே இங்குள்ள பஜனை மடத்தில் இருந்த இராமர், கிருஷ்ணர் படங்களுக்கு வடநாட்டிலிருந்து ஒரு சிறு அன்னக்காவடியுடன் முன்பே வந்திருந்த பார்ப்பன மூதாட்டி ஒருவர் விளக்கு ஏற்றி, அர்ச்சனை-கள் செய்து கொண்டிருந்தார்கள். அந்த மூதாட்டியே சுவாமிகளுக்கும் அன்றுட பூஜையை நடத்திவந்தார்கள்.

பிங்கள ஆண்டு ஆடித் திங்கள் ஐந்தாம் நாள் சுவாமிகள் தங்கி-யிருக்கும் ஆசிரமத்தைச் சுற்றியுள்ள சுமார் 1 ஏக்கர் நிலப்பரப்பைச் சுற்றி $4\frac{1}{2}$ அடி உயரத்தில் காம்பவுண்டு சுவர் அமைக்கும் வேலை பொ. கருப்பணன் சேர்வை, அச்சனம்பட்டி வெள்ளைச்சாமி தேவர் ஆகியவர்களால் வானம் வெட்டப்பட்டு ஊர் பொதுமக்கள் உதவியுடன் சப்பாணிமணியம் தனது வண்டிமூலம் குடார்பட்டி கோட்டையிலிருந்து கருங்கற்கள் கொண்டுவந்து பாதுகாப்புச் சுவரும், ஏற்கனவே இருந்த பஜனை மடத்து காம்பவுண்டு சுவரின் மேற்குப்பக்கம் நுழைவுவாசல் அமைத்தும் இரண்டு மாதங்களில் வேலையை முடித்தார்கள்.

பிறகு ஆசிரமத்தைச் சுற்றியுள்ள இடத்தில் நந்தவனம் ஏற்படுத்துவதற்காக, இருபத்தைந்து நாட்களில் முன்பு பஜனைமடம்

இருந்த இடத்தில் கிணறு வெட்டி கபிலை ஏற்படுத்தினர்கள். நந்தவனத்தில் மா, பலா வாழை, கொய்யா எலுமிச்சை, சீத்தா, நாரத்தை, மாதுளை முதலிய பழவர்க்க மரங்களும், மற்றும் தென்னை, முருங்கை நெல்லி, சந்தனம், வில்வம் இலவு ஆகிய பலன்தரும் மரங்களையும், மல்லிகை முல்லை, இருவாச்சி (திருவாதி) பிச்சி, அரளி, நந்தியாவட்டை, மனோரஞ்சிதம் ஆகியபுஷ்ப வகை செடிகளையும் உற்பத்தி செய்தார்கள். ஆசிரமம் தவம் செய்து வருவதற்கு ஏற்ற சோலை வனமாக அமைந்து, அமைதியும் குளிர்ச்சியும் நிறைந்திருந்தது.

மௌனகுரு சுவாமிகள், ஸ்ரீ பராபரக் கடவுள் உபதேசப்படியே நித்தியம் தவயாது, ஜெப தப நிஷ்டைகள் செய்து கொண்டு, பசியால் வாடிவரும் சாது சங்க ஞானிகளுக்கும் அடியார்களுக்கும், அன்னக்காவடி மூலம் சாதம் எடுத்து போஜனம் வழங்கவும் தினமும் காலை மாலை பூஜைகள் முறைப்படி நடத்தவும் ஏற்பாடு செய்து எவ்வித இடர்பாடுமின்றி ஒழுங்காக நடந்து வந்தது. உள்ளூர், வெளியூர் அன்பர்களும் தினமும் வந்து சுவாமிகளை வணங்கி ஆசி பெற்றுச் செல்வார்கள்.

பிங்கள ஆண்டு பங்குனி உத்தரத்தன்று முதலாவது குருபூஜை ஸ்ரீ மௌனகுரு சுவாமிகளுக்கும், ஸ்ரீ பரப்பிரம்ம பரமசர்குரு சுவாமிகளுக்கும், பதினறு அபிஷேகங்களுடன் பாத பூஜையும் நடத்தி சாது சங்க ஞானி-களுக்கு நள பாகத்துடன் போஜனம் படைத்து, பின் சுற்றுவட்டார கிராம மக்களுக்கு போஜனம் படைத்து அன்னதானம் வெகு விமரிசையாக நடந்தது.

பிங்கள ஆண்டு பங்குனி உத்தரத்தன்று துவங்கிய முதலாவது குருபூஜை, துன்மதி ௵ பங்குனி உத்திரம் வரை ஸ்ரீ மௌனாநந்த சுவாமிகளால் எவ்விதமான குறைபாடின்றி நடத்தப்பட்டது. சுவாமிகளுக்கு பக்க உதவியாகவும் சொன்ன பணிகளைச் செய்து முடிப்பதற்கும் பெருமாள் பட்டி மெய்யன்பர்கள் தயாராயிருந்து, பயபக்தியுடனும், கீழ்படிந்தும் நடந்து வந்தார்கள்.

துந்துபி ௵ சித்திரை ௴ ஆரம்பத்தில் மௌனகுரு சுவாமிகள் வசித்து வந்த நந்தவன நிலத்தை 1. வெள்ளைசாமி தேவர் 2. பழ. கருப்பையா பிள்ளை 3. நாட்டாண்மை விட்டிசூரியத் தேவர் இந்த மூன்று கிராம முக்கிய ஸ்தர்களும் சேர்ந்து, சுவாமிகள் தங்குயிருந்தாலும் நந்தவன நிலம் கிராமத்துக்குச் சொந்தமாக இருக்க வேண்டுமென நினைத்து, தங்கள்

மூன்று பேர் பெயரிலும் கூட்டுப் பட்டாவாகப் போட்டு ரிக்கார்டு செய்து அது விபரத்தை சுவாமிகளிடம் கூறியதுடன், நந்தவனத்தில் விளையும் விளை பொருள்களை விற்று மடத்திற்கு ஆகக்கூடிய செலவுகளைச் செய்து கொள்ளும் படியும் கூறினார்கள்.

அது கேட்ட சுவாமிகளும், இந்த சொத்து அடியார்களுக்குச் சொந்தமானது. அப்படியிருக்க நீங்கள் மூவரும் உங்கள் பெயரில் பட்டா ஏற்படுத்திக் கொள்வது கூடாது. ஏனென்றால் பின் ஒரு காலத்தில் உங்கள் பிள்ளைகள் உரிமை கொண்டாடுவார்கள். பிறகு மௌனகுருநாதன் மடம் சீர்கெட்டுப் போகும். ஆகவே இன்றிலிருந்து பதினைந்து தினங்களுக்குள், மேற்படி பட்டாவை ரத்துச் செய்து குருநாதன் பெயருக்கு பட்டா போடுங்கள். அப்படி பட்டா மாற்றாவிட்டால் நீங்களே எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள். சுவாமி வேறு எங்காவது போய் விடும் என்று எழுதிக் காட்டி விட்டு நிஷ்டையில் அமர்ந்து விட்டார்கள்.

சுவாமிகள் உத்திரவுப்படி அந்த மூன்று நபர்களும் ஒன்றுமே செய்யவில்லை. பதினைந்து நாட்களும் முடிந்துவிட்டது. மறுநாள் காலையில் சுவாமிகள் மேற்படி மூன்று நபர்களையும் மடத்துக்கு வரவழைத்து மடத்துப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்து விட்டு இராஜபாளையத்தை நோக்கி பிரயாணமானார்கள்.

சல்லக்குளம் மடத்தில் இருந்த சங்கு சுவாமிகள் மௌனகுரு சுவாமிகளை அழைத்துக் கொண்டு இராஜபாளையம் போய் அங்கு ஓர் மடத்தில், சேர்த்தார்கள். அங்குள்ள அன்பர்களும் சுவாமிகளை நல்ல முறையில் வரவேற்று உபசரித்து பாதம் பணிந்து, வேண்டிய உதவிகளைச் செய்தார்கள்.

சில நாட்கள் அந்த மடத்தில் தங்கி விட்டு, அவ்வூரின் சமீபமுள்ள சஞ்சீவி மலையில் உள்ள வௌவால் புடவு (குகை) என்னுமிடத்திற்குப் போய் நாற்பத்தெட்டு நாட்கள் கடுந்தவம் மேற்கொண்டார்கள். அப்படி தவம் இருக்கும் காலத்தில், மடத்திலிருந்து பால் பழம் கொண்டு போய் சுவாமிகளுக்கு புகட்டவும், சுவாமிகள் இடும்பணிகளை செய்யவும், நடராஜன் என்னும் 10 வயதுப் பையனை சங்கு சுவாமிகள் ஏற்பாடு செய்து வந்தார்கள்.

இரண்டு மூன்று நாட்கள் சென்றவுடன், அவ்வூரில் உள்ள புலிவீரத்தேவர் என்பவர் குகைக்கு வந்து, சுவாமிகளுக்குப் பணிவிடை செய்து, உண்மையான பக்தராகி விட்டார். அவர் அன்றாடம் கூலிவேலை

செய்து தனது ஏழு குழந்தைகளையும், குடும்பத்தையும் காப்பாற்ற வேண்டிய பரம ஏழை. அவரை ஒரு கொலைக் கேஸில் சேர்த்து அரசு காவலர்கள் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் மேற்படி புலிவீரத்தேவரும் தன் நிலையை சுவாமிகளிடம் கூறி, சரணடைந்து தன்னையும் தன் குடும்பத்தையும் சுவாமிகள் தான் காப்பாற்ற வேண்டுமென்று மனமுருகி கண்ணீர் விட்டு வேண்டிக்கொண்டார். இந்த நன்றியை தானும் தன் வாரிசுகளும் பரம்பரை பரம்பரையாய் மறக்க மாட்டோம் என்று முறையிட்டார். உடனே சுவாமிகளும் "குழந்தைகள் செய்யும் தவறை தாய் தந்தையர் பொறுப்பர், அதுபோல யாரொருவர் தான் செய்த தவறை உணர்ந்து திருந்தி நடக்க சங்கல்பம் எடுத்தாலும் கடவுள் மன்னிப்பார். எதற்கும் நீ பயப்பட வேண்டாம். உன்னை அந்தக் கொலைக் குற்றத்திலிருந்து விடுவிப்பார்கள். அரசு காவலர்கள் யாரும் இன்றிலிருந்து உன்னைத் தேடமாட்டார்கள். சுவாமிகள் இடும் பணிகளைச் செய்து கொண்டு பயப்படாமல் தைரியமாக இரு" என்று எழுதிக் காட்டினார்கள். குருநாதன் உத்தரவுப்படியே புலிவீரத்தேவரைப் பற்றிய கொலைக்கேஸ் தள்ளுபடியாகி விட்டது.

பின் 48 நாட்கள் கடுந்தவம் முடிந்து மேற்படி குகையை விட்டு கீழே இறங்கி வந்து, இராஜபாளையத்தில் முன்பு தங்கியிருந்த மடத்தில் தங்கியிருந்தார்கள். அது சமயம் பெருமாள் பட்டி முக்கியஸ்தர்களான நாட்டாண்மை வெள்ளைச்சாமித்தேவர், பழ. கருப்பையா பிள்ளை நாட்டாண்மை விட்டிசூரியத் தேவர் ஆகிய மூன்று நபர்களும், தங்கள் பெயரில் கூட்டுப்பட்டாவாக, குருநாதன் மடத்து நிலத்தை பட்டா போட்டிருந்ததை தள்ளுபடி செய்து, ஸ்ரீ மௌனாநந்த பரமகுரு சுவாமிகள் பெயருக்குத் தனிப்பட்டாவாகப் போட்டு தஸ்தாவேசு ஏற்படுத்திக்கொண்டு கழுவத்தேவர், அரியக்காள் என்ற மூதாட்டியுடன் இராஜபாளையம் சென்று சுவாமிகள் பாதம் பணிந்து, பட்டா தஸ்தாவேசை சுவாமிகளிடம் சமர்ப்பித்து, 'குருநாதா, மடத்து நிலத்தை எங்கள் பெயரில் பட்டா போட்டது தவறு. அதை மனப்பூர்வமாக மன்னித்து தாங்கள் எங்கள் ஊருக்குப் புறப்பட்டு வந்து, மடாலயத்தை ஒப்புக்கொண்டு, எங்களையும் எங்கள் கிராமமக்களையும் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார்கள். சுவாமிகளும் அன்பர்களின் வேண்டுகோளை ஏற்று பெருமாள் பட்டிக்குச் செல்ல உறுதி கூறினார்கள்.

சுவாமிகள் இராஜபாளையத்தை விட்டுப் போகப்போகும் விபரம் அறிந்த புலிவீரத்தேவரும் சுவாமிகள் பாதம் பணிந்து சுவாமி எனக்

புலிவீரன் 1. வனமூர்த்தி 2. முத்தையா 3. ராமச்சந்திரன் 4. லெக்ஷிமி 5. அடியேன், என் மனைவி ஆக ஏழு நபர்கள் குடும்பத்துடன் வறுமை-யால் தினம் தினம் செத்துப் பிழைத்துக் கொண்டிருக்கிறோம். எங்கள் வறுமை நீங்கி நல்வாழ்வு பெற அருள் பாலிக்க வேண்டும், என வேண்டிக் கொண்டார். அதற்கு சுவாமிகளும் உமது குடும்பம் க்ஷேமமடைய வேண்டுமானால் அன்னக்காவடி ஒன்று தயார் செய்து கொடும், அதன் மூலம் சாதம் எடுத்து அடியார்களுக்கு பசியாற்ற ஏற்பாடு செய்துகொள்கிறேன். நீங்கள் உங்கள் குடும்பத்துடன் இவ்வூரை விட்டு, மதுரை நகர் சென்று ஜீவியத்தை நடத்துங்கள். சகல சம்பத்தும் உண்டாகும். வறுமை உங்களை விட்டு அகலும் என்று எழுதிக் காட்டினார்கள். அதைப் படித்துப் பார்த்த புலித்தேவரும் சுவாமி என்னிடம் அன்னக்காவடி செய்வதற்கு எவ்வித வசதியுமில்லை, ஆனால் ஒரு பித்தளை சருவம் இருக்கிறது. அதை கொண்டு காவடிப் பாத்திரம் செய்யலாம்' என்று கூறி தன் வீட்டுக்குச் சென்று மேற்படி சருவப்பானையை எடுத்து வந்து சுவாமிகளிடம் ஒப்படைத்தார்.

அதுசமயம் தற்செயலாக சுவாமிகளிடம் வந்து பாதம் பணிந்து நின்ற பாத்திரங்கள் தயாரிக்கும் கன்னார ஆசாரியிடம், மேலே குறிப்பிட்ட சருவப்பானையில் இரண்டு அன்னக்காவடி பாத்திரங்கள் செய்து கொடுக்குபடி புலிவீரத்தேவர் கூறினார். சுவாமிகளும் சைகை மூலம் பாத்திரங்கள் செய்து கொடுக்கும்படி கூறினார்கள். ஆசாரியும் சுவாமிகள் விரும்பியபடி அன்னக்காவடியும் அதற்கான பாத்திரங்களையும் செய்து முடித்து சுவாமி-களிடம் சமர்ப்பித்தார். புலிவீரத்தேவரும் ஒரு வாரத்தில் தனது குடும்பத்துடன் மதுரைக்குச் சென்று விட்டார்.

பிறகு பெருமாள்பட்டியிலிருந்து சுவாமிகளை அழைத்து போக வந்திருந்த அன்பர்களுடன் சுவாமிகளும், சங்குச்சாமியும், புலிவீரத்தேவரால் ஸ்ரீ மௌனகுரு நாதனிடம் சமர்ப்பிக்கப்பட்ட அன்னக்காவடியுடன் இராஜபாளையம் அன்பர்களிடம் விடைபெற்று, அவர்கள் அனைவருக்கும் ஆசி கூறிவிட்டு பெருமாள் பட்டிக்கு வந்து சேர்ந்தார்கள்.

வாடிப்பட்டி ரயில்வே காங்கி மேஸ்திரியாக வேலை பார்த்து வந்த வாடிப்பட்டி சீனிச்சாமி சேர்வை சுவாமிகளிடம் வந்து, சூடதீபம் காட்டி, பால்பழம் புகட்டி பாதம் பணிந்து, 'மடத்துக்கும் தங்களுக்கும் என் ஆயுள் காலம் வரை தொண்டு செய்கிறேன். ஏதாவது முக்கியவேலை இருக்கும் போது தகவல் சொல்லியனுப்பினல் நானும் எனது காங்கி வேலை ஆட்களும் வந்து, தாங்கள் கூறும் பணிகளை நல்ல முறையில் செய்து முடிக்கிறோம்' என்று கூறியதுடன் அது போலவே செய்து வந்தார்.

வாடிப்பட்டியில் பலசரக்கு கடை நடத்தி வந்த ராமுபிள்ளை என்பவர் சுவாமிகளிடம் வந்து சூட தீபம் காட்டி சுவாமிகளுக்கு பால் பழம் புகட்டி ஆசி பெற்றுச் சென்றதுடன், வாரா வாரம் பூஜைக்கான எண்ணை சூடன், பத்தி, சர்க்கரை கொடுத்து வந்ததுடன் சுவாமிகளின் அன்புக்குப் பாத்திரமானார்.

துந்துபி ஹூ பங்குனி உத்திர நக்ஷத்திர குருபூஜை நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. சீனிச்சாமி மேஸ்திரியாரவர்களால் ஜெயகண்டி ஒன்று தயார் செய்து மடத்தில் சேர்க்கப்பட்டது. சுவாமிகளின் முயற்சியால் தம்பட்டம் ஒன்றும் சங்கு ஒன்றும் சேகரிக்கப்பட்டது. பெருமாள் பட்டி மக்கள், சீனிச்சாமி மேஸ்திரி, அவரது காங்கி ஆட்கள், யாவரது ஒத்துழைப்பால் குருபூஜை நல்ல முறையில் மேளதாளம், தம்பட்டம், ஜெயகண்டி, சங்கு முழக்கத்துடன் அடியார்களுக்கும், பொது ஜனங்களுக்கும் அன்னதானம் நடத்தி ஆருறாவது குருபூஜை இனிதே நடந்தேறியது.

சுவாமிகளின் மாடலயமும் நந்தவன சோலையும் மிக மிகச் சிறப்புடன் விளங்கி வந்தது. சுற்று வட்டார அன்பர்களும் மக்களும் தினசரி சாரி சாரியாக வந்து சுவாமிகளைத் தரிசித்து வந்து பசியாறிப் போவார்கள். இப்படியாக மடாலயமும், எல்லாம் வல்ல பராபரக்கடவுள் அருளால் பூலோக கைலாசம் போல் விளங்கி வந்தது

''திடம் பெற்ற ஞானிகள் சேருவதால்
பசியாருவதால்
உடம்பற்ற உண்மைகள் போதிப்பதால்
உபதேசிப்பதால்
படம் பெற்ற தெய்வத்தை பாவித்தலால்
தினம் பூஜித்தலால் - மவுனகுரு
மடம் பெற்ற பேறும் திருக்கோயிலும்
இல்லையே வையகத்தில்''

(வீரப்பர்)

என்றபடி மடாலயமும் பக்தி மார்க்கமும், அடியார்களுக்கு அன்ன தானமும் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கி வருஷா வருஷம் பங்குனி உத்தர குருபூஜையும் எவ்வித குறைபாடுமின்றி நடந்து வந்தது. தின்சரி பூஜைகளையும் பெருமாள்பட்டி பள்ளிச் சிறுவர்கள் இருவர் நடத்திவந்தார்கள். அவர்களும் அக்ஷய வருடம் ஆவணி மாதம் வரையில் நடத்திவந்தார்கள். பிறகு அவர்கள் நின்று விட்டார்கள். அக்ஷய வருடம் ஆவணி மாதம்

மூன்றாம் தேதி வியாழக்கிழமை (19-8-1926) அன்று பெருமாள்பட்டி பள்ளியில் படிக்கும் மாணவர்களான அய்யாக்கண்ணு, மாயாண்டி என்ற இரண்டு தேவமார் பையன்கள் சுவாமிகளிடம் வந்து பாதம் பணிந்து வணங்கி 'சுவாமி நாங்கள் இருவரும் தங்கள் உத்திரவுப்படி பணிவிடை செய்கிறோம்' என்று கூறினார்கள். சுவாமிகளும்பல புத்திமதிகளை எழுதிக்காட்டி ஒப்புக்கொண்டார்கள்.

அன்று முதல் அந்த இரண்டு சிறுவர்களும் காலக்கிரமம் தவருமல் அன்ருடம் ஆலய சுத்தம் பூஜைப் பாத்திரங்கள் சுத்தம், பூப்பறித்தல், பூத்தொடுத்தல் பூஜைகள் செய்தல் முதலிய பணிகளை நல்ல முறையில் சுவாமிகள் உத்திரவுப்படி, பரிசுத்த மனத்துடன் நடத்தி வந்தார்கள். அவர்கள் பணி ஸ்ரீமுக வருஷம் பங்குனி உத்திர குருபூஜை முடியும் வரை யாதொரு குறைவும் இன்றி நடந்துவந்தது. பிறகு அவ்விருவரும் பிற வேலை செய்யக் கூடிய பதினாறு வயதை அடைந்ததால் சுவாமிகளைப் பாதம் பணிந்து 'சுவாமி நாங்களும் வெளியில் கிடைக்கக் கூடிய கூலி வேலைகளுக்குச் சென்று எங்கள் தாய் தந்தையருக்குப் பணம் சம்பாதித்து கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் எங்களை ஆசீர்வதித்து அனுப்ப வேணும்; முக்கியமான வேலை ஏதும் இருக்கும் போது எங்களுக்கு கட்டளையிட்டால் நாங்கள் வந்து அவ்வேலையைச் செய்கிறோம்' என்று வேண்டி நின்றார்கள். சுவாமிகளும் அவர்களை ஆசீர்வதித்து விபூதிபிரசாதம் கொடுத்து புன்முறுவலுடன் விடை கொடுத்தார்கள். பையன்கள் இருவரும் விடைபெற்றுச் சென்றார்கள்.

மேலே கண்ட பையன்கள் மடத்துப் பணியிலிருந்து விலகிய நாள் முதல் பெருமாள்பட்டி வடக்குத் தெருவைச் சேர்ந்த க.ராமு, மு.குருவன் என்ற சிறுவர்கள் மடாலய சுத்தம், பூப்பறித்தல், பூத்தொடுத்தல், பூஜை செய்தல் ஆகிய பணிகளைச் செய்து வந்தார்கள். வாடிப்பட்டி சீனிச்சாமி மேஸ்திரியார் தனது சொந்தச் செலவில் சுவாமிகள் தவம் புரியும் ஆசிர-மத்தின் முன்புறம், தென்வடல் 12 அடி, கிழமேல் 65 அடியில் 16 கல்தூண்களை நாட்டி வலைமரம் போட்டு, கைமரங்கள் ஏற்றி, வரிச்சுக் கம்புகளால் பின்னி தென்னங்கீற்றுகளால் கூரை வேய்ந்து 100ஆட்கள் உட்காரக் கூடிய முன் மண்டபத்தை ஏற்படுத்தி கொடுத்தார்கள். அதோடல்லாமல் சுவாமிகள் உத்திரவுப்படி தனது கேங்க் ஆட்களுடன் எந்தப் பணியாஞலும் கொஞ்சமும் தடங்கள் இல்லாது சகல வேலைகளையும் செய்து சுவாமிகளின் பரிபூரண அன்புக்குப் பாத்திரமானார்கள்.

பவ வருடம் ஆவணி மீ 17ந் தேதி மௌன குருசுவாமிகளின் மூத்த சகோதரர் ஆ. முத்துக்கருப்பன் சேர்வை தனது குமாரர் சோமு என்ற பையனோடும் சுவாமிகளின் சகோதரியின் மகள் சிறுமியுடனும் பி.புத்தூரி-லிருந்து புறப்பட்டு ஒரு பித்தளை குத்துப் போகிணி சட்டியுடன் பழவகை-களும் வாங்கிக் கொண்டு பெருமாள்பட்டி மடாலயம் வந்து சேர்ந்து, சுவாமிகளின் பாதம் பணிந்து தாம் கொண்டு வந்த பழ பட்சணங்களை, சுவாமிகளுக்கு ஊட்டுவித்தார்கள். பிறகு சுவாமிகள் அங்கு உள்ளோரின் க்ஷேம லாபங்களை எழுத்து மூலமாக எழுதிக் கேட்டறிந்தார்கள். அவர்களும் நான்கு நாட்கள் மடத்திலேயே தங்கியிருந்து விட்டு ஐந்தாம் நாள், சுவாமிகள் பாதம் பணிந்து நமஸ்கரித்து விபூதி பிரசாதம் பெற்றுக்கொண்டு, சுவாமிகளிடம் விடைபெற்று பி.புத்தூருக்குப் பிரயாணமானுர்கள். அவர்கள் கொண்டு வந்த பாத்திரத்தை மடத்து உபயோகத்துக்கு கொடுத்துச் சென்றார்கள்.

சில நாட்கள் சென்று மடத்தில் இருந்த வடநாட்டு பிராமண மூதாட்டியவர்கள் இயற்கையெய்தினார்கள். அவர்களின் பூத உடலையும், மடத்து காம்பவுண்டுக்கு வடபுறம் உள்ள காலி இடத்தில் சாஸ்திரமுறைப்படி சமாதி வைக்கப்பட்டது. நான்கு மாதங்கள் சென்று ராஜபாளையத்திலிருந்து சுவாமிகளுடன் வந்து தங்கியிருந்த சங்குச்சுவாமிகளும் அமரத்துவம் அடைந்து விட்டார்கள். அவரையும் பார்ப்பன மூதாட்டியை அடக்கம் செய்து காலியிடத்தில், அந்த அம்மையார் சமாதிப்பக்கத்தில் அடக்கம் செய்யப்பட்டு விதிப்படி சாஸ்திரங்கள் செய்விக்கப்பட்டது.

பிறகு சுவாமிகள் மடாலய மூலஸ்தான கட்டிடம் ஒன்றை கருங்கல், செங்கல், சுண்ணாம்பால் கெட்டிக்கட்டிடமாக கட்ட திட்டம் தீட்டி, சல்லக்குளம் வயிற்றுப்பண்டாரம் மகன் கந்த பண்டாரம் என்பவரை வரவழைத்து 70,000/- எழுபதினுயிரம் செங்கல் செய்யுமாறு எழுத்துமூலம் உத்திரவிட்டார்கள். கந்த பண்டாரமும் பவ ஹூ மாசி மீ 5-ந் தேதி செங்கல் செய்யும் வேலையை துவக்கினுர்கள்.

இதற்கு முன் அக்ஷய வருஷம் முதல் ஒவ்வொரு வருட பங்குனி உத்திர குருபூஜை கைங்கர்ய பத்திரிக்கையையும், சுவாமிகளின் சரிதத்தை-யும், எழுதும் பொறுப்புக்களையும் அய்யாக்கண்ணு என்பவரிடம் சுவாமிகள் ஒப்புவிப்பார்கள். மேற்படி பையனும் சுவாமிகளின் கட்டளைப்படி கொஞ்சமும் மனங்கோணுமல் எழுதிக் கொடுத்து வருவது வழக்கம்.

சுவாமிகள் பெருமாள்பட்டிக்கு வந்த நாள் முதல் மு.மருதமுத்து

சேர்வை என்பவர் குருநாதன் மடாலய அன்னக்காவடி எடுத்து நாள்தோறும் சாதம் கொண்டு வந்து, அடியார்களுக்குப் படைத்து வருவார்.

பவ ஸ்ரீ பங்குனி மாத உத்தர நக்ஷத்திர குருபூஜை நெருங்கியது. மருதமுத்து சேர்வை, கழுவத்தேவர், சப்பாணிமணியம், தேனூர் சு.ரா. நீலமேகம்மணியம், வாடிப்பட்டி ராமு பிள்ளை, ரயில்வே மேஸ்திரி சீனிச்சாமி சேர்வை, மேற்படி காங்கியைச் சேர்ந்த பொன்னுச்சாமி சேர்வை, அமாவாசை சேர்வை, ஆண்டியப்பன் சேர்வை, வ.துரைச்சாமி சேர்வை, ஆசிரியர் காமாக்ஷி பிள்ளை, கட்டாரிசேர்வை, புதுப்பட்டி ஓவுளி செட்டியார் மற்றும் பெருமாள்பட்டி மெய்யன்பர்கள் எல்லோரும், நான்கு ஐந்து நபர் வீதம் கோஷ்டியாக அவரவர்களுக்குப் பழக்கமான கிராமங்களுக்குச் சென்று நெல், அரிசி, பயறு வகைகள், ரூபாய் முதலியவைகளைச் சேகரித்து வந்தார்கள். பெருமாள்பட்டியிலும் வீட்டு வாரியாக ஒரு படி புழுங்கல் அரிசியும், அரைரூபாயும் வசூல் செய்து, பத்திரிக்கை அச்சடித்து, பத்திரிக்-கைகள் கொடுத்தும் குருபூஜைக்கான சகல சாமான்களையும் சுவாமிகள் உத்திரவுப்படி தயார் செய்யப்பட்டது. மடாலயத்தில் கொட்டகைகள் போட்டும், தோரணங்கள் கட்டியும், சோழவந்தானிலிருந்து, சமையல் பாத்திரங்களுடன் பன்னிரண்டு சமையல்காரர்களையும் வரவழைத்து உத்தர நக்ஷத்திரத்தன்று, பதின்மூன்று மூடை அரிசியையும் அதற்கான காய்கறி-களையும் சாம்பார், ரசம் ஆகிய வகன்யும் தயார் செய்து வைக்கப்பட்டது.

இதற்கு முந்திய பதினேழு ஆண்டுகள் நடந்தேறிய குருபூஜை களைவிட பன்மடங்கு விஷேசமாய், இவ்வருடம் குருபூஜை சிறப்பான முறையில் நடந்தேறி முதலாவதாக அடியார்களுக்கு அன்னதானம் நடத்தி, பின் சுற்று வட்டார கிராமமக்களுக்கும் ஜாதி மத பேதமின்றி சமபந்தி போஜனம் நடைபெற்று இனிதே முடிவடைந்தது. குருபூஜையில் கலந்து கொண்ட அனைவரும் குருநாதனிடம் விபூதியும் ஆசியும் பெற்றுச் சென்றார்கள்.

கந்தன் பண்டாரமும் செங்கல் எழுபதினாயிரம் தயாராகி விட்டதாக சுவாமிகளிடம் கூறினார். அவைகளை காளவாசலில் ஏற்றி யுவா வருஷம் சித்திரை மாதம் 5ம் தேதி காலை 6 மணிக்கு காள வாசலுக்கு தீ மூட்டும்படி சுவாமிகள் எழுதிக்காட்டிய உத்திரவுப்படி தீ மூட்டப்பட்டது.

யுவா வருஷம் சித்திரை மீ 10ம் தேதி சுவாமிகள் சீனிச்சாமி மேஸ்திரியாரை வரவழைத்து வைத்துக்கொண்டு பழ.ராமசாமிபிள்ளையிடம் :

''புல்லினல் ஐந்துகோடி புதுமண்ணுல் பத்துக்கோடி
செல்லுமா காலமெல்லாம் செங்கலால் நூறுகோடி
அல்லிருங் குழலாய் கேளாய் ஆலயம் மடம் நமக்கு
கல்லினல் கட்டிவைத்தோர் கைலை விட்டகலார் கண்டாய்''

என்று ஆன்றோர்கள் கூறியிருக்கிறார்கள். ஆகவே செங்கல் சுட்டு தயாராய் இருக்கிறது. கட்டிடம் ஆரம்பிக்க வேணும். **சுவாமிகள் வருகிற ஆடி மாதம் 10ம் தேதி வியாழக்கிழமை காலை 7-30 மணியளவில் சாயுச்சநிலை அடைந்து விடும்,** ஆகையால் டி கட்டிட வேலையை நீங்கள் தான் நடத்த வேண்டும். இவ்வூரில் வேறுயாரும், இவ்வேலையை நடத்தக்கூடிய தகுதி வாய்ந்தவர்கள் இல்லை. அந்தத்தகுதி உங்களுக்கு உண்டு. மேலும் பணவசதியும் ஏவலாளர்களும் நிறைய உங்களுக்கு உண்டு. ஆகவே இந்த புண்ணியகாரியத்தை நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று எழுதிக்காட்டினர்கள்.

அதைப் படித்துப் பார்த்த பழ.ராமசாமி பிள்ளையவர்கள் ''சுவாமி நானோ மூன்று சகோதரர்கள், குழந்தைகளுடன் பாகப்பிரிவினை செய்யா கூட்டுக்குடும்பத்தில் ஒருவனுக வாழ்ந்து கொண்டிருக்கிறேன். தங்கள் கட்டளைப்படி பொறுப்பை ஏற்று நடத்தினல், எங்கள் குடும்பம் பிரிவினை -யாகிவிடும். ஆகவே இவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்று நடத்த முடியாத நிலையிலிருக்கிறேன் என்று கூறினார்கள்.

அதற்கு சுவாமிகள் 'நாம் எழுதிக் காட்டிய விபரத்தை வே யாரிடமும் உமது வாயால் சொல்ல வேண்டாம். மறந்தும் யாரிடமாவது இது விபரம் கூறினீர்களானல், உமது குடும்பம் கஷ்ட நிலையை அடையு என்றும், சுவாமிகள் சாயுச்ச நிலை அடைந்த இரண்டு ஆண்டுகள் முடிந்த வுடன், தென்திசையிலிருந்து சிவந்த நிறமுடைய ஆசானுபாகுவான ஒ இங்கு வருவார். அவர் இந்த கட்டிட வேலையை ஆரம்பிப்பார். அ நேரம் அவருடன் ஒத்துழையுங்கள். கட்டிடம் நல்லபடியாக முடிவடைந்து கும்பாபிஷேகமும் முறைப்படி நடந்தேறும்' என்று எழுதிக் காட்டினர்கள் அதைப்படித்துப் பார்த்த ராமசாமி பிள்ளையும் தங்கள் உத்தரவுப்ப செய்கிறோமென்று சொல்லி, சுவாமிகள் பாதம் பணிந்து விடைபெற்று சென்றுவிட்டார்.

யுவா வருடம் ஆடிமாதம் ஆரம்பத்தில் சுவாமிகள் நிஷ்டைக செய்யும் ஆசிரமத்தின் முன்புறம் அமைக்கப்பட்டுள்ள கிழ மேலோடி

மண்டபத்தின் கீழ்புறம் கடைசியில், ஆசிரமத்துக்கு எதிரில் சமாதிக்கான குழி வெட்டப்பட்டு நான்கு பக்கமும் செங்கல்லால் தரைமட்டத்துக்கு 3 அடி கீழிருக்கும்படி கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டதுடன், அதற்கான அளவில் தேக்கம் பலகைகளால் பெட்டி ஒன்றும் செய்விக்கப்பட்டது.

''அற்புதம் நிகழ்த்திடும் யுவா ஆடி பத்து
அமரராகிச் சொலிக்கும் மௌனநந்தமுத்து
அவருடைய மடாலயத்தின் சொத்து
ஆரெடுத் தொளித்தாலும் பித்து
அடைந்தன்னுர் சந்ததி வேரத்து
அடியோடழிந்து விடுவார் சொத்து
அனைத்து நலம் பெற அவராலயத்தை சுத்தி
அன்புடன் குருநாதன் பாதத்தை நத்து''

(22-7-1935 யுவாஆடி 7 : புத்தூர் ம.குரு)



என்ற கவி எழுதப்பட்டது. சுவாமிகள் ஜீவன் முத்தராகி மறைந்து விட்டாரென நினைத்து, குருநாதன் மடாலயத்துக்குப் பாத்தியப்பட்ட சொத்துக்களை யாரொருவர் எடுத்து அனுபவித்து பாத்தியம் கொண்டாடு-வார்களானல் மேலே கண்ட கவியின் பிரகாரம் துன்பத்தை அனுபவிப்பார்-கள் என்றது, நாடறிந்த உண்மையாகும் என்பதே கருத்து.

ஆடிமீ 7-ந் தேதி 22-7-1935 சோமவாரம், மடாலயக் கட்டிடம் கட்டுவதற்கு உத்தரம், சரக்கட்டைகள் விபரம் அறிந்துவர தேனூர் சு.ரா. நீலமேகமணியம் அவர்கள், தாண்டிக்குடி மலைக்குச் சென்றார்கள். அன்று மாலை சுவாமிகளின் மூத்தசகோதரர் முத்துக்கருப்பன் சேர்வை அவர்கள், புத்தூரிலிருந்து பெருமாள்பட்டி மடாலயம் வந்து சேர்ந்தார்கள்

யுவா ஆண்டு ஆடித்திங்கள் 10 நாள் (25-7-1935) வியாழக்கிழமை -யும் பிறந்தது. முன்பு சுவாமிகள் குறிப்பிட்டப்படி காலை ஏழுமணி முப்பது நிமிடங்களானது. சுவாமிகள் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த படியே எவ்வித சலனமும் இன்றி, ஜீவாத்மாவை பரமாத்மாவில் ஐக்கிய மாகச் செய்து ஜீவன் முக்தரானார்கள்.

அது சமயம் பக்கத்திலேயே இருந்த பையன்களான அய்யாக்-கண்ணு, குருவன், ராமு என்ற மூவரும் சுவாமிகள் இருந்த நிலையைக் கண்டு கதறி அழுததுடன் கிராம பெரியோர்களுக்கெல்லாம் விபரம் தெரிவித்தார்கள். கிராம மக்கள் எல்லோரும் சுவாமிகள் இருந்த மண்டபம் முழுவதும் கூடி விட்டார்கள். அனைவரும் கதறி அழுது கொண்டிருந்தார்

கள். மகளிர் கூட்டம் ஒப்பாரி வைத்து அழ ஆரம்பித்து விட்டார்கள். சடயம்பட்டி என்னும் பக்கத்துக் கிராமத்திலிருந்த அன்பர் சப்பாணி-மணியம் அவர்களுக்கு தகவல் கிடைத்தவுடன் மின்னல் வேகத்தில் வந்து சேர்ந்தார்கள், அழுதுகொண்டிருந்த மகளிரைப் பார்த்து, 'தாய்க்குலமே, சகோதரிகளே, தயவு செய்து யாருமே அழுகுரல் செய்யக்கூடாது. மகான்கள் மூச்சை தம்பனம் செய்வது சகஜம். இதைப் பற்றி யாருமே அழக்கூடாது. யாரேனும் கண்ணீர் சிந்துவார்களானால், சுவாமிகளின் மோக்ஷ பாதையை கண்ணீர் தடுக்கும், பிறகு கண்ணீர் உதிர்த்தவர்கள் பாவத்துக்கு ஆளாக நேரிடுமென்றும் பெரியோர்கள் கூறியிருக்கிறுர்கள்.

சுவாமிகள் ஜீவன்முக்தரான செய்தி சுற்றுவட்டாரத்திலுள்ள கிராமங்களுக்கெல்லாம் காட்டுத் தீ போல் பரவியது. மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து சுவாமிகளைத் தரிசித்த வண்ணமிருந்தார்கள் பெருமாள் பட்டி பக்தர்களால் திருவருட்பா, தேவாரம், திருவாசகம், திருப்புகழ், கைவல்யம், ஞானக்கோவை, நடராஜப்பத்து, கந்தரலங்காரம், கந்தர் சஷ்டிக்கவசம் முதலிய பக்திப்பாடல்கள் பாடப்பட்டது சுவாமிகளின் விபரத்தை தாண்டிக்குடி மலேக்குச் சென்றிருந்த மெய்யன்பர் நீலமேக-மணியத்துக்கும் தெரிவிக்கப்பட்டது. தகவல் தெரிந்தவுடன் அவரும் ஓடோடி வந்து சேர்ந்தார்.

பிறகு பழ.ராமசாமி பிள்ளே, பொ, ராசுத்தேவர் சப்பாணிமணியம் முத்துவேளார், பொன்னுசாமி சேர்வை, வெள்ளேச்சாமித்தேவர், சீனிச்சாமி சேர்வை, விட்டிசூரியத் தேவர், மு. மருதமுத்து சேர்வை, வாடிப்பட்டி சீனிச்சாமி சேர்வை, ராமு பிள்ளை, துரைச்சாமி சேர்வை. புதுப்பட்டி ஓவுளி செட்டியார், மொ. ஜக்கபிள்ளை, கமுவத்தேவர், மெ. மூக்கத்தேவர் மற்றும் முக்கியஸ்தர்களும் கூடி சுவாமிகளின் அடக்கத்துக்கான பொருள் களையும், பூஜைக்கான பொருள்களையும் சேகரித்து, முறைப்படி பூஜைகளே அதி விமரிசையுடன் நடத்தி சுவாமிகளால் முன்பே தயார் செய்து வைக்கப்பட்டிருந்த அழகிய பெட்டியில் சுவாமிகளே பத்மாசனத்தில் அமர வைத்து அதில் உப்பு, விபூதி, செங்கல் பொடி, குங்குமம் ஆகிய -வைகளே இடைவெளியில்லாது போட்டு சமாதிக்குள் வைத்து அடக்கம் செய்யப்பட்டது. சுவாமிகளின் சமாதிக்கு மேல் லிங்கப் பிரதிஷ்டை செய்து நித்திய பூஜை நடைபெற்று வருகிறது. மக்கள் தங்கள் பிணி தீரவும் தங்கள் பிரச்சனைகள் நல்லவிதமாக முடியவும் தினமும் மடாலயத்துக்கு வந்து சுவாமிகளின் சமாதியை வலம் வந்து விபூதி பிரசாதம் பெற்று செல்கிறார்கள்.

சித்தம் குடி கொண்டு சின்மயமுந்தானுகி
சீவன் முத்தரென் மறைந்தார்
புத்தூர் மௌனநந்தர் அவர்தம்
பொன்னடி போற்றி! போற்றி!

(வெள்ளிமலை அடிகள்)

சுவாமிகள் முன்பு கூறிய படி இரண்டு வருடங்கள் சென்று தென் பகுதியிலிருந்து சுந்தரம் சுவாமிகள் என்பவர் பெருமாள்பட்டி மாடலயம் வந்து மடாலயத்தில் கட்டிடம் கட்டி முடிக்க வேண்டிய கடமை எனக்கு இருக்கிறதென்று கூறி, கிராம மக்களின் ஒத்துழைப்புடன் ஏற்கெனவே சுட்டு வைத்திருந்த செங்கற்களை வைத்து கெட்டிக் கட்டிடமாக கட்டி கும்பாபிஷேகம் முடித்துசென்று விட்டார்.

பெருமாள்பட்டி கிராமம் மிகவும் பிற்பட்ட கிராமம், போக்குவரத்து வசதி கிடையாது. பெரும்பாலான ஜனங்கள் அன்றாடம் கூலி வேலை பார்த்தால்தான் சாப்பிட முடியும். அப்படியிருந்த கிராமத்தின் வடக்குப் பக்கம் சர்க்கரை ஆலை வந்தது. மேற்குப் பக்கம் ரசாயன ஆலை, கிழக்குப் பக்கம் நூல் ஆலை, தெற்குப் பக்கம் நூல் ஆலை ஆகியவைகள் வந்தன. பெருமாள்பட்டி மக்களுக்கும் நிரந்தர வேலை கிடைத்து சுவாமிகளின் கூற்றுப்படி சுபிச்சமாக வாழ்கிறார்கள் நிரந்தர, தார் சாலை அமைத்து பஸ்வசதியும் ஏற்பட்டு விட்டது. பெருமாள்பட்டி மக்களும் மடாலயத்தை பக்தி சிரத்தையுடன் பூஜைகள் செய்து பார்த்து வருகிறார்கள்.

சுவாமிகளுக்கு தொண்டு செய்து வந்த அய்யாக்கண்ணு என்னும் அன்பர் தீயணைப்பு நிலைய வேலை கிடைத்து, ஓய்வு பெற்றபின் அமலன் அடிகள் என்னும் பெயரில் மடாலயத்தையும் கிராம நிர்வாகத்தையும் கவனித்து வருகிறார், மாசானம் என்பவர் பல இடங்களுக்கும் சென்று சித்தவைத்திய தொழில் பார்த்து அந்திய காலத்தில் பெருமாள்பட்டிக்கு வந்து, அமலன் அடிகள் மற்றும் அன்பர்கள் ஒத்துழைப்புடன் வைத்தியம், ஜோதிடம் பார்த்து அதில் வந்த வருமானத்தை வைத்து சுவாமிகளின் சமாதியின் மேல் கெட்டிக்கட்டிடமாக கட்டி கும்பாபிஷேகம் நடத்தினர்கள். மாசானம் அவர்களும் சிவபதமடைந்து விட்டார். சர்க்கரை ஆலையில் வேலை பார்த்து வரும் அ. ஆறுமுகம் என்னும் அன்பர் மடாலயத்தின் அன்றாட பூஜைகளையும், பௌர்ணமி திருவிளக்கு பூஜையையும் பக்தி சிரத்தையுடன நடத்தி வருகிறார்.

★ ★ ★ ஓம் தத் சத் ★ ★ ★

# ஸ்ரீமந் பரப்ரம்ம மௌனானந்தா பரம குரு சாமிகள் உபதேச உண்மை வரலாறு.

## கடவுளை கெஞ்சிக் கேட்பது

ஓம் ஹரி ஹரி ராமகிருஷ்ண பார்வதி பரமேஸ்வர பராக் கடவுளே உன் பாதாரம்கெதி அடிமை என் உடல். பொருள், ஆவி மூன்றும் உனக்கு சொந்தம். அடிமை ஜெனனம் முதல் சரீர பரியந்தம் அன்றாடம் செய்யும் பாவ புண்ணிய தோஷம் எல்லாம் உன் செயலே செயல். என் செயலாவது இனி ஒன்றுமே இல்லை. எல்லாம் உனக்கே அற்புதம், என்னையும், தன்னையும் ஏகமனதாக்கி அருள் புரிகுவாய், கிருபை தருவாய், ஞானத்தை புகட்டுவாய், கருணையை நாட்டுவாய் சத்தியவந்தனுய், பிரம்ப சொரூபியாய், ஞான பிரகாசனுய் சிரஞ்சீவி நாதனுய் முச்சுடர் கொடுத்தாய், மூலப்பொருளாய், சதானந்தனாய், சிவானந்தனுய், பரமானந்தனுய், ராமானந்தனுய், சத்தானந்தனுய், சித்தானந்தனுய், முத்தானந்தனுய், மௌனானந்தனுய், நித்யானந்-தனுய், நிர்மலம், நிஷ்களம், நிர்க்குணம், நிராகரம், நிரஞ்சனம், நிரதிசயம், நிர்விகாரம், நிர்வாணமவுனம், சுயப்பிரகாசனுய், தானாய், தனியாய், ஏகமாய், ஜெகஞ்ஜோதியாய், பரஞ்ஜோதியாய் ஜெகத்-திற்கு சித்தனாய், பரத்திற்கு முக்தனாய், பராபர உனக்கு பரிசுத்த-முள்ள பக்தனாய், சாந்தனாய், சற்குணனாய், நீங்காச்சினேகனாய், பிரியாத அன்பனாய், விடாத சிஷ்யனுய், ஆழுமையாய், சக்திசிவனுய், சுத்தபிர்ம ஐக்கியனாய் சாந்தியாய மௌனயோகேஸ்வரனாய், வரப் பிரசாதனுய், குருப்பிரசாதனாய் ஞானப்பிரகாசனாய், சிவப்பிரகாசனுய், சர்வமத சர்வஜீவ சமரச பரமாத்மாவாய், ஊன் உறக்கமற்ற உத்தம சர்க்குருவாய், இறப்பும், பிறப்பும் நீக்கிய எங்கும் பிரகாசனாய், நினைப்பும், மறுப்பும், அற்ற நிர்மல சிந்தனாய், நிக்ஷயம் தெரிந்த நிர்வாண முக்தனுய், காமனை எரித்து காலனை உதைத்த காரண குருவாய், தொண்ணூற்ரூறு தத்துவங்களையும் அறிந்த சாயுக்ஷயநாதனு-யிருக்க, கேட்கும்வரம், நினைக்கும் வரம் தந்து சிந்திக்க உன் முழு சித்தத்தையும் என் உள்ளத்தில் நாட்டுவாய், ஓம் குருபாதம் சிரசு மேல் கொண்டேன். ஈசா உன்பாதம் சிரசுமேல் கொண்டேன். ஈகையும்

செல்வமும் சித்தியும் முக்தியும் தந்து ரட்சித்து அருள்புரிவாய் என்று சத்தியமாய் நம்பி நித்தியமும் தவமுமாய் வெள்ளை வஸ்திரத்தை விரித்து அதன் வடக்கு முகமாய், பத்மாசனமோ அல்லது சித்தாசனமோ போட்டு உட்கார்ந்து சுழிமுனையில் பார்வையை செலுத்தி ஒரே நினைவாய் ஓம் சிவாய நம, ஓம் சிவாய நம என்று ரேசக, பூரக, கும்பகம் செய்து வர சகல சித்திகளையும் பெற்று மோட்ச சாம்ராஜ்யத்தை அடை (வோமாக) யலாம்.

ஓம் குருபாதம் சரணம்

★ ★ ★

# 96 தத்துவங்களின் விபரம்

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர், மாமுனிவர் சித்தராதியாய்
தெரிவரியபூரணமாய் காரணங் கற்பனை கடந்த செல்வமாகி
கருசூரிய மலரின் மணமென்னி வெண்ணெய்யுடலுயிர் போல்
கலந்தென்னாலும்,
சூரிய நடுவூடிருந்த பெரிய பொருளாயாக தனைத் தொழுதல் செய்வாய்

கிடைப்பதற்கு அறியபிறப்பாகிய மானிடப்பிறவிக்கு கடவுளால் ஏற்படுத்தப்பட்ட தத்துவங்கள் (96) ஆகும். தத்துவம் என்றால் தன்னை அறிவதாகும். தத்துவமசி என்றாலே : நீ அதுவாக இருக்கிறாய் என்று தான் அர்த்தம். அது என்பது கட்புலனுக்கு எட்டாத கருத்துப் பொருள்.

தத்துவங்கள் மூன்று வகையாக பிரிக்கப்பட்டுள்ளன. அவை :

| | | |
|---|---|---|
| முதல் தத்துவம் | 30 | முப்பது கவி முப்பது முப்பத்துருவமும் |
| இரண்டாம் தத்துவம் | 30 | செப்பு மதினுடை கோயில் வாழ்பவனும் |
| மூன்றாம் தத்துவம் | 36 | செப்புமதினுடை கோயில் சிதைந்தபின் ஒப்பிலனை வருமோட்டம் எடுப்பாகே |
| ஆக 3 வகைக்கும் | — | |
| மொத்தம் | 96 | என்று கூறப்பட்டிருக்கிறது. |

| 1ம் தத்துவம் | | 2ம் தத்துவம் | | 3ம் தத்துவம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பூதம் | 5 | நாடி | 10 | ஆதாரம் | 6 | அவஸ்தை | 5 |
| பொறி | 5 | வாயு | 10 | மண்டலம் | 3 | வினை | 2 |
| புலன் | 5 | சயம் | 5 | மலம் | 3 | | |
| கண்மேந்திரியம் | 5 | கோசம் | 5 | குணம் | 3 | | |
| கண்ம விஷயம் | 5 | | | தோஷம் | 3 | | |
| கரணம் | 4 | | | ஏடனை | 3 | | |
| அறிவு | 1 | | | ராகம் | 8 | | |
| | 30 | | 30 | | 36 | | |

முதல் தத்துவம் முப்பதின் விபரமும் விளக்கமும் வருமாறு

I பூதம் 5

1. பிரிதிவு : மண் (திருகாஞ்சிபுரம்)
2. அப்பு : நீர் (திருவானைக்கா)
3. தேயு : நெருப்பு (திருவண்ணாமலை)
4. வாயு : காற்று (திருக்காளத்தி)
5. ஆகாயம் : சுத்தவெளி (திருசிதம்பரம்)

II பொறி 5

1. சோத்திரம் (செவி) ஆகாசமிடமாய் சப்தத்தை அறியும்.
2. தொக்கு (சரீரம்) வாயுவினிடமாய் நின்று பரிசத்தை அறியும்.
3. சட்சு (கண்) தேயுவினிடமாய் நின்று ரூபத்தை அறியும்.
4. சிங்குவை (நாக்கு) அப்புவினிடமாய் நின்று ரசத்தை அறியும்
5. ஆக்கிஷணம் (மூக்கு) பிரிதிவுனிடமாய் நின்று கந்தம் அறியும்.

III புலன் 5 (இதனை தன் மாத்திரை எனவும்சொல்வர்)

1. சத்தம் : கேட்கப்பட்டது செவிக்கு உயிர்க்கூறு.
2. பரிசம் : சுக துக்க அறிவு உடம்பிற்கு உயிர்க்கூறு.

3. உருவம் : காணப்பட்டது கண்ணுக்கு உயிர்க்கூறு.
4. சிரசம் : அறுசுவையறிவு நாவிற்கு உயிர்க்கூறு.
5. கந்தம் : நற்கந்த துற்கந்த அறிவு நாசிக்கு உயிர்க்கூறு.

## IV கண் மேந்திரியம் 5 கன்ம விஷயம் 5

1. வாக்குலவாய் : விஷயம் வசனம் (வார்த்தை) ஆகாசத்தினி-டமாய் நின்று வசனிக்கும் வாய்க்கு உயிர்க்கூறு.
2. பாதம்லகாய் : விஷயம் கமனம் (நடை) வாயுவினிடமாய் நின்று நடக்கவியலும் காலுக்கு உயிர்க்கூறு.
3 பாயுரு அல்லது அபானம் : விஷயம் விசர்சனம் விடுதல். அப்புவியினிடமாய் நின்று மலஜலாதிகளை வெளிப்படுத்தும் அபானத்துக்கு உயிர்க்கூறு.
4. உபத்தம் அல்லது குறி : விஷயம், ஆனந்தம், மகிழ்தல். பிரிதிவுனிடமாய் நின்று ஆனந்திக்கும் குறிக்கு உயிர்க்கூறு
5. பாணி அல்லது கை : விஷயம் தானம் கொடுக்கல் வாங்கல் தேயுவினிடமாய் நின்று இடல் ஏத்தல் செய்யும் கைக்கு உயிர்க்கூறு.

## தன் மாத்திரை : புலனுங்கன்ம விஷயமும் ஒடுங்கும் விதம்

1. சத்தம் : ஆகாசத்திலும், செவியிலும் ஒடுங்கும்
2. பரிசம் : வாயுவிலும், உடம்பிலும் ஒடுங்கும்
3. உருவம் : தேயுவிலும், கண்ணிலும் ஒடுங்கும்
4. இரசம் : நீரிலும், நாவிலும் ஒடுங்கும்
5. கந்தம் : பரிதிலும், மூக்கிலும் ஒடுங்கும்
6. வசனம் : வாக்கிலும், ஆகாசத்திலும் ஒடுங்கும்
7. கமணம் : காலிலும், வாயுவிலும் ஒடுங்கும்
8. தானம் : கையிலும், தேயுவிலும் ஒடுங்கும்
9. விசர்க்கம் : அபானத்திலும், அப்புவிலும் ஒடுங்கும்
10. ஆனந்தம் : குறியிலும், பிரிதிவிலும் ஒடுங்கும் ஆக பூதம் பொறி, புலன், கண் மேந்திரியம், கண்ம விஷயம் முதலிய 25-க்கும் உள்ள விபரம் முடிந்தது.

## கரணம் 4

மனம் : ஒன்றை நினைப்பது.
புத்தி : ஒன்றை விசாரிப்பது.

அகங்காரம் : ஒன்றை மென்மேலும் எழுப்புவது.

சித்தம் : மூன்றுக்கும் காரணமாய் ஒன்றை செய்து முடிப்பது.

## அறிவு - 1

''உள்ளந்தனைக் கண்டு மகிழ்ந்திருத்தல், ஆகமுதல்
தத்துவம் முப்பதும் முற்றிற்று.

By. V. A. Kannu Adikal

## இரண்டாம் தத்துவம் முப்பதின் விபரம்

### நாடி 10

1. இடகலே : வலது கால் பெருவிரலின்று கத்திரிக்கோல் போல மாறலாக இடது நாசியை பற்றி நிற்கும். இதுவே வாத நாடி சுவாசம் 16 அங்குலப் பிரமானம். இதற்கு மாத்திரை ஒன்று.
2. பிங்கலே : இது இடது கால் பெருவிரலினின்று கத்திரிக்கோல் போல் மாறலாக வலது நாசியை பற்றி நிற்கும். இதுவே பித்த நாடி. சுவாசம் 12 அங்குல பிரமானம். இதற்கு மாத்திரை அரை.
3. சுழிமுனே : மூலாதாரத்தை தொடர்ந்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாய் நடுநாடியாய்ச் சிரசளவு முட்டி நிற்கும். இரண்டு நாசியிலும் உபாயமாகப் பகிர்ந்து ஓடும் அக்னி அலி எனப்படும். இதுவே சிலேத்ம நாடி. இதற்கு மாத்திரை கால் இம்மூன்று நாடிகளும் முக்கியமாம்.
4. சிங்குவை அல்லது உசா : உண்ணாக்கிலே நின்று சோறு தண்ணீர் இவைகளை விழுங்கப் பண்ணும்.
5. புருடன் : வலது கண்ணளவாய் நிற்கும்.
6. காந்தாரி : நாபியிற் தோன்றி சத்தம் ஏழுக்கும், ஏழு நாடியாக கண்டத்துறுவி இடது கண்ணளவாய் நிற்கும்.

அத்தி : வலது காதளவாய் நிற்கும்.

அலம்புடை : இடது காதளவாய் நிற்கும்.

சங்கிணி : குறியினளவாய் நிற்கும்.

குரு : நாபியிலுறைந்து அபான அளவாய் நிற்கும்.

இவைகளில் இடகலை, பிங்கலை, சுழிமுனை இம்மூன்றும் மூலாதாரத்தை தொட்டு இடகலே, பிங்கலே, இரண்டும் சுழிமுனையிலே இணங்கி கத்திரிக்கோல் போல கபாலத்தை முட்டி நாசியளவு பற்றி நிற்கும். இம்மூன்றும் இப்படி நிற்க காந்தாரியானது

நாபிஸ்தானத்தில் தோன்றி ஏழுவகையாகப் பிரிந்து இச்சா சொரூபமாய் கண்டத்தைப் பற்றி நிற்கும். அத்தி, உசா இவ் விரண்டும் பத்து நாடியாய் பிரிந்து கண்களிரண்டிலும் பற்றி நிற்கும்.

அலம்புடை : பணிரெண்டு நாடியாகப் பிரிந்து ஜடத்திலுண்டாகிய எலும்பு, நரம்பு, ரோமம், இவைகளில் பரவி பாகமாக மாறி வலது இடது செவிகளைப் பற்றி நிற்கும்.

குரு : நாபிஸ்தானத்தில் தோன்றி குதத்தை பற்றி நிற்கும் புருடன், சங்கினி.

புருடன், சங்கினி : எனும் நாடிகள் நாபியில் தோன்றிக் குய்யத்தைப் பற்றி நிற்கும்.

## வாய்வு 10

1. பிராணன் 2. அபானன் 3. வியாணன் 4. உதாணம் 5. சமானன் 6. நாகன் 7. கூர்மன் 8. கிரிகரன் 9. தேவதத்தன் 10. தனஞ்செயன்.

## உபவாயு 4

1. வயிரன் 2. முக்கியன் 3. அந்தர்யாமி 4. பிரவஞ்சனன்.

பிராணன் : வலாட மத்தியில் தோன்றி சித்திர நாடியில் விழுந்து, ஓவ் என்று மூலாதாரத்தில் குதித்து, அவ் என்று நாபித்தானத்தில் முட்டி, சவ் என்று இடைகலை பிங்கலைகளிலோடி கபாலத்தைச் சுற்றி நாசியில் 12 அங்குலம் புறப்பட்டு நாலங்குலம் கழன்று எட்டங்குலம் மீண்டும் தானின்ற இடத்தில் தாக்கி, உத்தம தேதிக்கு நாளிகை ஒன்றுக்கு 360 சுவாசமாக கொல்லன் துருத்திக்குள் காற்று ஏறுவது போல ஏறும். இப்படி ஏறுகின்ற சுவாசமானது இரவும் பகலும் 60 நாளிகையுள்ள நாள் ஒன்றுக்கு 21,600 சுவாசமாகின்றது. இப்படி இணங்கியுள்ளவற்றுள் 7,200 சுவாசம் வெளிப்பட்டு பாழாக பாய்ந்து 14,400 சுவாசம் உள்ளே புகும்.

விபரம் : பிராண வாயு வெளியேறி வரும் போது பிங்கலை எனும் சூரிய கலை பாய்ந்தால் 12 அங்குலப் பிரமாண சுவாசமும், பிங்கலை எனும் சந்திரக்கலை பாய்ந்தால் 16 அங்குல பிரமாணமான சுவாசமாகும்.

ஒவ்வொரு மனிதனிடமும் சுவாசம் நடக்கும் காலமும் சுவாச எண்ணிக்கையும் மூலாதாரத்தில் விநாயகரிடம் காலை 6 மணி முதல் 6-40 வரை சுவாசம் - 600

பிரிதிவில் சுவாதிஸ்டானத்தில் : பிரம்மாவிடம் 6-40 முதல் 1-20 மணி வரை - 6000

அப்புவில் மணிபூரகத்தில் : விஷ்ணுவிடம் 1-20 முதல் இரவு 8-00 மணி வரை – 6000

தேயுவில் : அனுகதம் ருத்திரனிடம் 8 மணி முதல் 2-40 வரை சுவாஸம்-6000.

வாயுவில் விசுத்தி : மகேஸ்பரனிடம் 2-40 மணி முதல் 3-46 மணி வரை - 1000

ஆகாயத்தில் : ஆக்ஞை சதாசிவனிடம் 3-46 முதல் 4-54 வரை சுவாசம் - 1000

நாதாந்தத்தில் தக்ஷிணாமூர்த்தியிடம் 4.56 முதல் 6 மணி வரை சுவாசம் - 1000

ஆக நாளொன்றுக்கு நடக்கும் சுவாசம் மொத்தம் — 21,600

பிராணபஞ்சபூதியம் : எந்த மனித தொழில் மிகாமலும், குறையாமலும் ஒன்றோடொன்று நெடுங்காமலும் தினமும் தங்களுடைய எதா ஸ்தானத்தில் இருந்து கொண்டு தங்கள் தொழில்களை நிறைவேற்றுகின்றனவோ அந்த மனிதனுடைய தேகத்தில் இது சரிவர நடக்கும்.

அபானன் : குதத்தையும் குய்யத்தையும் பற்றி நின்று மலஜாதிகளை கழிக்கும்.

வியானன் : தோலிலே நின்று பரிசங்களை அறிவிக்கும்.

உதானன் : உதராக்குனியை எழுப்பி உண்ட அன்னசாரத்தை 72000 நாடி நரம்புகளிலே கலப்பித்துச் சரீரத்தை வளர்பிடும்.

சமானன் : எல்லாவாயுவையும் ஏறுதல் குறைதல் செய்யவொட்டாமல் சமனாய் கீழ் கொண்டு இயங்கும்.

நாகன் : விக்கலும், முக்கலும், கந்தலும், சோம்பலும், திமிறும், உண்டாகும்.

கூர்மன் : நௗகப்பும், முகலக்ஷணமும் புளகமும், மயிர்க்கூச்சலும் உண்டாக்கி கண்களிலே நின்று இமைக்கும்,

கிரகரன் : புருவமத்தியைப் பற்றி நின்று தும்முவித்தலும், அழுவித்தலும் செய்யும்.

தேவதத்தன் : விழித்திருக்கும் போது ஓடுவித்தலும். உலாவுவித்தலும் யுத்தம் பண்ணுவித்தலும் செய்யும்'

தனஞ்செயன் : பிராணன் உடம்பை விட்டுப் போனாலும் தான் பிரியாமல் நின்று உடம்பை வீங்குவித்தலும், விரிவித்தலும், இரத்தத்தை பிரிப்பித்தலும் செய்து மூன்று நாள் பரியந்தம் சரீரத்திலே –யே இருந்து மூன்றாம் நாள் கபாலத்தை பிளந்து ஓடிப்போகும். முற்றும் துறந்து கைவல்யம் யோக சாதனம் செய்யும் மகரிஷிகள் மறுஜென்மம் வராதபடியிருக்க இத்தனஞ்செயனை முதலிலேயே கபா

லத்தைப் பிளந்தோட செய்வார்கள்.
பிறகு வீங்கல், விரிதல், புளிப்பித்தல் போன்ற விகாரங்களுக்கு உட்படாமல் தேகம் வற்றிப் போகும்.

உபவாயு-4

1. வயிரன் : காலெலும்பும், கதிரெலும்பும் கூடிய இடத்தில் நின்று உடம்பில் அவஸ்தையை உண்டாக்கி வாதம், ஈளை, இருமல் இளைப்பு முதலான நோய்களை உண்டாகும்.
2. முக்கியன் : கை எலும்பு இரண்டும், கதிரெலும்புங் கூடிய இடத்தில் நின்று சரீரத்தின் யாக்கைகளை சிறக்க நிறுத்தும்.
3. அந்தர்யாமி , பிரவஞ்சனன் : பிரணவத்திற்கு இருப்பிடமாயிருந்து சரீரத்திற்கு அடையானுயாகவும் அச்சாணியாகவும் இருக்கும்.

சயங்கள்-5

1. அமர்வாசயம் : உண்ட அன்னசாரம் அமரும் இடம்
2. பகிர்வாசயம் : அன்னம் பருகும் இடம்
3. ஜலவாசயம் : ஜலக்குழி இறங்கும் இடம்
4. மலவாசயம் : மலக்குழி இறங்கும் இடம்
5. சுக்லவாசயம் : சுக்கிலம் பிரியும் இடம்.

கோசங்கள்—5

1. அன்னமயகோசம் : ஜட்பாகவிகாரகாகத் தோற்றப்பட்ட தூலதேகம்
2. பிராணமய கோசம் : பிராணனும் கண்மேந்திரியமும் கூடிநிற்பது
3. மனோமய கோசம் : மனதுங்கன் மேந்திரியமும் கூடி நிற்பது
4. விஞ்ஞானமய கோசம் :புத்தியும், ஞானேந்திரியமும் கூடிநிற்பது
5. ஆனந்தமய கோசம் : பிராணவாயுவும் சுழுத்தியும் கூடி நிற்பது

இரண்டாம் தத்துவம் முப்பதும் முற்றிற்று.

By அமலனடிகள்,

## மூன்றாம் தத்துவம் முப்பத்தாறின் விபரம்

ஆதாரம் 6 மண்டலம் 3 மலம் 3 ஏடணை 3 தோஷம் 3
குணம் 3 இராகம் 8 அவஸ்தை 5 வினை 2.

ஆதாரம்.6

மூலாதாரம் : நாற்சதுரத்திற்குள் முக்கோணமாயிப்பது. இதன்

நடுவே நிற்கும் அஷ்ரம் ஓங்காரம். இதில் நிற்கும் தேவதை விநாயகர் இடம் குதம்.

சுவாதிஸ்டானம் : நாற்கோணமாகியது. இதனடுவே நிற்கும் அக்ஷரம் நகாரம். இதில் நிற்கும் தேவதை பிரம்மா இடம். குய்யம், தேவி சரஸ்வதி, பிரிதிவு, ஐயும் பக்ஷி வல்லாறு 11 அ (க)

மணிபூரகம் : பிறைக் கோணமானது. இதனடுவே நிற்கும் எழுத்து மகரம். இதில் நிற்கும் தேவதை விஷ்ணு, இடம். நாபிதேவிலட்சுமி அப்பு, கிலியும், ம. ஆந்தை, இ (கக)

அனுகதம் : முக்கோணமானது. இதனடுவே நிற்கும் அக்ஷரம் சிகாரம், தேவதை ருத்திரன். இடம் இதயம் தேவி பார்வதி தேயு, சவ்வும், 8 காகம் உ (வ)

விசுத்தி : அறுங்கோணமாகியது. இதில் நிற்கும் அக்ஷரம் வகாரம் தேவதை மகேஸ்வரன் இடம். அடிநாக்கு தேவி மகேஸ்வரி, வாயு, �ஸ்ரீம் 19 கோழி எ (கஉ)

ஆக்ஞை : வட்டமாயிருப்பது இதனடுவே நிற்கும் அக்ஷரம் யகாரம் அதிதேவதை சதாசிவன் இடம் நெற்றி, தேவி மனோன்மணி ஆகாயம். ஹரியும், மயில் 3 ஒ (யரு)

இவ்விதமாக ஆதாரம் ஆறிலேயும் ஆறு தெய்வமும் ஆறு வீடும் கண்டு கொள்க. (க, கக, வ, கஉ, கரு)

## மண்டலம்-3 (3)

அக்னி மண்டலம் : மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கடைக்கு மேல் நாற்சதுரமாய் நடுவே மூன்று கோணமாய் பிரிதிவும், அப்புவிங் கூடியயிடத்தே நாவிதமுடைய புஷ்பமாயிருப்பது.

ஆதித்த மண்டலம் : உந்திக்கு நான்கு விரற்கடைக்கு மேல் இருதய கமலம் அறுங்கோணமாய், எட்டிதழ் உடைய புஷ்பமாய், வாழைப்பூப் போன்று, கீழ் நோக்கி இருப்பது.

சந்திர மண்டலம் : கோடி சந்திராதித்தியர் உதயமானாற் போல் சிரவுநடுவே ஓவ் என்ற அக்ஷரத்தை முன்னிட்டு அமிர்தம் மேல் நோக்கி அக்னி கீழ் நோக்கி சரியம் நிற்கும். இதற்கு நடுவில் பராசக்தி எழுந்தருளியிருப்பாள். ஆதலால் இது அமிர்தகலை என்று சொல்லப்படும்.

## மலம் 3

ஆணவம் : உடம்பை நான் என்று இருப்பது.

காமியம் : கண்டதற்கெல்லாம் ஆசைப்படுவது.
மாயை : தனக்கு வருவதையறியாமல் கோபங்கொண்டிருப்பது.

## ஏடனை - 3 (தோஷப்)

அத்தி ஏடனை : திரவியத்தை தேடி ஆசைப்படுதல்.
புத்திர ஏடனை : புத்திரனைத் தேடி ஆசைப்படுதல்.
உலகேடனை ; நிலம், ஊர், காணி தேடி ஆசைப்படுதல்.

## தோஷம் - 3

வாதம் : வாயுவினுடைய கோபம்
பித்தம் : அக்னியினுடைய கோபம்
சிலேத்மம் : அப்புவினுடைய கோபம் இந்த மூன்று விதமான கோபத்தால் சகல வியாதிகளும் உண்டாகின்றன.

## குணம் - 3

சாத்மீகம் : ஞானம், அருள் தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறியடக்கல், ஈகை முதலியன, எட்டும் பொருந்தி உத்தம குணமுடைய நல்லறிஞனாயிருத்தல்.
இராக்ஷஸம் : மனம், ஊக்கம், ஞானம், வீரம், தருமம், தவம், தானம், கல்வி, கேள்வி என எட்டும் பொருந்தி அகங்காரமாய் மத்திய குணத்தனாயிருத்தல்.
தாமதம் : பேருண்டி, பெருந்துயில், சோம்பல், நீதிவழுவஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை, ஒழுக்காவழு, இப்பதினொன்றும் பொருந்தி, அதம குணத்தனாயிருத்தல்.

## ராகம் - 3

காமம் : ஆசை குரோதம் : கோபம் அல்லது பிணக்கு உலோபம் : பிடிபாடு அல்லது உள்ளதை யொழித்தல்.
மோகம் : பிரியம் அல்லது தானல்லாதார் மரித்தால், தான் மரித்தாற் போல் இருத்தல்.
மதம் : கருவம் அல்லது தான தரும பரோபகாராதிகளை விலக்குதல்.
ஆச்சர்யம் : ஒன்றைக் கண்டு மகிழ்தல் அல்லது உறவாயும் உதட்டில் நகைப்புமாயிருந்து உட்பகை விளைவித்தல்.
இடும்பை : உதாசீனம் அல்லது தானே சர்வாதிகாரி என்றெண்ணி யாவரையும் இகழ்தல்
அகங்காரம் : நான் என்ற அற்ப மதியின் ஆர்வத்தால் தன் குற்றங்களை அறியாமல் பிறர் சொல்லைக் கேட்டு கோபித்தல்.

### அவஸ்தை - 5

சாக்கிரம் : லாடத்தானம், இதில் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், வசனம், கமணம், தானம், விசர்க்கம், ஆனந்தம், மனம், புத்தி, அகங்காரம் சித்தம் இப்பதினான்கு கருவிகளும் காவலர்களைப் போல் தன்னுடைய சந்நிதியிற் சேவிசாத்தற்காக பராசக்தி அருளால்ராஜாவும் படையும் போல நிற்கும்.

சொப்பனம் : கண்டத்தானம், இதில் மனம், புத்தி, அகங்காரம் சித்தம், என்ற நான்கும் கனவு கண்டு மறந்து விட்டேன் என ஒடுங்கி நிற்கும்.

சுழுத்தி : இருதயத்தானம், இதில் சித்தம், அகங்காரம், இவ்விரண்டும் மனம், புத்தியுடன் கலந்து ஒடுங்கி நிற்கும்.

துலியம் : நாபிக்கமலம், இதில் சித்தமொடுங்கி நிற்கும்.

துரியதீதம் : குறியிடம் இதில் அகங்காரம் ஒடுங்கி நிற்கும்.

### வினை 2

நல்வினை : புண்ணியம் செய்தல்.

தீவினை : பாவம் செய்தல்

(ஆக மூன்றாம் தத்துவம் 36ன் விபரம் முடிந்தது)

### சிவவாக்கியம்

''நவ் விரண்டு காலதாய், நவின்ற மவ் வயிறதாய்
சிவ் விரண்டு தோளதாய், சிறந்த வவ்வு வாயதாய்
யவ் விரண்டு கண்ணதாய் அமைந்ததோர் உடலினுள்
செவ் யொத்து நிற்குமே சிவாயமைந் தெழுத்துமே''

### திரு மந்திரம்

''அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலாதார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலாற்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே''

நாம் தாயின் வயிற்றில் இருக்கும் போது கனவு.
புவியில் பிறந்ததும் விழிப்பு.
இறந்து விட்ட பின் தூக்கம்,

இவை மூன்றும் மானிடருக்கு சதா மாறி, மாறி வந்து கொண்டே இருக்கும். இவைகளை அறவே விட்டுவிட்டு சதா தூங்காமல். தூங்கும் நான்காவது முறையைக் கைக்கொண்டு ஆண்டவனை சதா தியானம் செய்து இப்பிறவிலேயே விதேக முக்தி அடைய வேண்டும்.

(காஞ்சி சங்கராச்சாரியார்)

## அன்பின் அபார சக்தி

அன்பே மிக்க வல்லமை வாய்ந்த ஒப்பற்ற இணைக்கும் சக்தி, மதங்களும், தேசங்களும் ஒத்து வாழ உதவும் சக்தி. எனவே, தூய்மையான சுயநலமற்ற தெய்வீகமான அன்பை உன்னில் வளர்த்துக் கொள். (சிவானந்தா)

''கிரகம்'' என்றால் வீடு அல்லது இருப்பிடம். 'வி' என்ருல் மேன்மை. மேன்மையான இருப்பிடம் விக்கிரகம். இறைவனது திருவருள் சிறப்பாக விளங்கித் தோன்றுகின்ற உயர்ந்த இடம் விக்கிரகம் எனப்படும்.

இறைவன் பொதுவாக எல்லாப் பொருள்களிலும் இருக்-கின்றான். விதிப்படி மந்திரமூலம் அமைந்த திருவுருங்களிலும் அருள் ஞானிகளிடத்தும் சிறப்பாக தங்கியிருக்கிருன். ஆதலால் திருவுருவங்களை வழிபடுவது முக்தி நலம் பெறுவதற்கு எளிய சாதனையாகும்.

''புண்ணியம் செய்வாருக்கு பூவுண்டு, நீருண்டு
அண்ணல் அது கண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம் இறை ஈசனை
நன்னெறியாமல் நழுவுகின்றாரே''

என்கிறார் திருமூலர். ஆதலின் இறைவனை மலரிட்டு வழிபட்டால் இன்னும் பல நலன்கள் எளிதில் கை கூடும்.

''திங்களங் கண்ணிப்புத்தேள் சேவடி கமலம் உண்டு
கொங்கவிழ் மலரும் உண்டு குளிர்தரு புனலும் உண்டு
தங்கும் அஞ்செழுத்தும் உண்டு தவள வெண்ணீரு முண்டு
வெங்கலிக்கு உடைவதென்னே வெளிற்றறிவுடயரே போல்''

என்று கூர்ம புராணங் கூறுகின்றது.

எனவே திருவுருவங்களின் நுட்ப திட்பங்களையும் வழிப்படுவதின் இன்றியமையாத கடப்பாட்டையும் அதன் வழி வகைகளையும் அதனுல் பெறும் பேற்றினையும் நாம் ஒவ்வொருவர்க்கும் உணர்தல் சாலவும் அவசியமாகும்.

## மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய படமும், உருவச்சிலையும்

இம் மண்ணுலகில் வாழ்ந்த ஒரு முனிவர், மகரிஷி, ஞானி, இவர்களது படத்தையோ, உருவச்சிலையையோ பின் சந்ததியார்

உணர்ந்து கொள்ளும் பொருட்டு அறிவுடைய மக்கள் செய்து வைத்திருந்தால் சான்றோரது குணதிசயங்களையும், அற்புதச் செயல்களையும், கேட்டறிந்த அல்லது படித்தறிந்த அல்லது நேரில் தெரிந்த அவர்கள் மட்டுமே அதற்கு கொடுக்க வேண்டிய மரியாதைகளையும், மதிப்பையும் கொடுத்து வணங்குவர். அவ்வாறு வணங்குகின்ற பெருமக்களை பார்த்து அந்தச் சிலையின் அல்லது உருவத்தின் அருமை பெருமைகளைத் தெரியாத ஒரு கூட்டத்தினர் கேலியும், நையாண்டியும் செய்தால் அக்கூட்டத்தினரை புத்திசாலிகள், பகுத்தறிவு பெற்றவர்கள் என்று அறிவுடைய எவரும் சொல்ல மாட்டார்கள். அவ்வாறு வணங்குவது முட்டாள்தனம் என்பார்களானுல் வணங்குகிறவர்கள் முட்டாள்களல்ல. அவர்களை முட்டாள்கள் என்று சொல்கிறவர்களே முழு முட்டாள்கள் ஆவார்கள் என்பதையும் யாரும் மறுக்க முடியாது.

இவ்வுலகத்திலுள்ள இவற்றிற்கே இவ்விதமான பேச்சுக்களும், நிகழ்ச்சிகளும் ஏற்படுமானால் சாதாரண மக்கள் காணமுடியாத கைலாசத்திலுள்ள சிவபெருமான் ஒவ்வொரு காரணத்திற்காக எடுத்துக் கொண்ட 25 அருள் வடிவங்களையும் ஸ்ரீ வைகுண்டத்தில் உள்ள மகா விஷ்ணுவின் 10 திரு அவதாரங்களையும் காணும் பேறு பெற்ற அருளாளர்கள், ஆழ்வார்கள், அடியார்கள், நாயன்மார்கள் பிறர் காணுமாறும், கண்டு உய்யுமாறும் பாடி அமைந்திருக்கின்ற தெய்வீக விக்கிரகங்களைப் பற்றி அவற்றின் உண்மையான வரலாறுகளையும், மகிமைகளையும் ஒரு சிறிதும் தெரியாதவர்கள் ஏதும் குளறுவதும், உளறுவதும் அவர்களுடைய அறியாமையையே வெளிப்படுத்துகின்ற செயலாம் என்பதை யாரும் மறுக்க முடியாது. படமும், கடிதமும் அன்பர்களை உணர்ச்சிவசபடுத்துமானால் கடவுளின் கடவுளின் உருவப் படமும், சிலைகளும், ஏன் பக்தர்களை பரவசப்படுத்தாது!

தனக்கு அன்புடைய ஒரு ஆணோ, பெண்ணோ எழுதின கடிதத்தை படித்து பார்த்த மாத்திரத்தில் எழுதினவர்களின் குணதி-சயங்களும் அன்பின் திறமும், மனதிற்கு வந்து உணர்ச்சிவசப்பட்டு கண்ணீர் வடிக்கிறதை பார்க்கிறோம். காதலனும், காதலியும், ஒருவர் படத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு உணர்ச்சிவயப்பட்டு இருப்பதைக் காண்கிறோம். மையினால் எழுதிய எழுத்தோ, தாளில் அமைந்த படமோ அவ்வுணர்ச்சியை கொடுக்கவில்லை என்பதையும் அதற்கு உள்ளீடாக நிற்கும் காரணகர்த்தாவான ஒருவரின் சீலமும் உறவும் அதனால் ஏற்பட்ட மாறாத அன்புமே அவ்வுணர்ச்சியை தட்டி எழுப்பிக்

கொடுத்தது என்பதையும் யாரும் மறுக்கமுடியாதல்லவா? அது போல கடவுளின் உருவப்படங்களும், உருவச்சிலைகளும் அந்தந்த உருவம் தாங்கி ஆண்டவன் செய்திருக்கின்ற துஷ்ட நிக்ரகமும், துஷ்டபரிபாலன -மும் பேராற்றல் உடைமையும் பிழைகள் பெருக்கின்ற பேரருள் உடைமையும் பக்தர்களை நினைத்து உருகும்படி செய்து அவர்களை பரவசப்படுத்தி ஆனந்தத்தில் திளைக்கச் செய்கின்றன என்பதை யாரும் மறுக்கவோ, பகுத்தறிவுக்கு ஒவ்வாதென்று கருதவோ முடியாதல்லவா?

## இந்து மதத்தின் நான்கு மார்க்கங்கள்

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு மார்க்கங்கள் உண்டு. அவைகளில் சரியையாளர்கள் சரீர உழைப்பினுல் வழிபாடும், தொண்டும் செய்து பிறவியற்ற நிலையெய்தி, கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாலோக பதவி பெற்று அங்கு சரீதத் தொண்டு செய்து கொண்டிருப்பார்கள் என்றும் கிரியையாளர்கள் சரீர உழைப்பினுலும், மனத்தின் ஈடுபாட்டாலும், வழிபாடும், தொண்டும் செய்து பிறவியற்ற நிலை எய்தி கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாமீபப் பதவி பெற்று சரீரத்தினுலும் மனத்தினாலும் கடவுளின் சமீபத்திலிருந்து கொண்டு தொண்டு செய்து கொண்டு மகிழ்ந்திருப்பார்கள் என்றும், **யோக** சித்தியாளர்கள் மனதினுலேயே யோக நிஷ்டை வரப்பெற்று, பிறவியற்ற நிலை எய்தி கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாரூப பதவி பெற்று, கடவுளது உருவத்தையே பெற்று இன்புற்று இருப்பார்கள் என்றும் இறுதியாக **ஞானம்** கை வரப் பெற்றவர்கள் எல்லாவற்றிலும் கடவுளைக் கண்டு பிறவியற்ற நிலை எய்தி சாயுச்ய பதவி பெற்று, நித்யானந்த பெருவாழ்வு பெற்றுத் திகழ்வார்கள் என்று கூறப்படுகிறது.

நாம் செய்த நல்வினை, தீவினைகளே நமது இன்ப துன்பத்திற்கு காரணம்.

இப்பூவுலகில் ஒவ்வொரு பெயருடன் ஒவ்வொரு நிலையில் ஆணுகவும், பெண்ணுகவும், பணக்காரனாகவும், எளியவனாகவும், பிறந்திருப்பதற்கும், இன்ப துன்பம் வந்து கொண்டிருப்பதற்கும், புகழ், இகழ் வருவதற்கும், பிணி, மூப்பு சாக்காடு வருவதற்கும், நல்ல மனைவி

நல்ல கணவன், நல்ல பிள்ளைகள் வாய்ப்பதற்கும், அவை பல்வேறு விதமாக மாறி அமைவதற்கும், நாம் முன்பு செய்த செயல்களைக் கொண்டு நம்மை ஆண்டு வருகின்ற ஆண்டவன் நியாயத்தீர்ப்புக் கொடுத்து அமல் நடத்தி வருவதே காரணம் என்று இந்து சமயம் எவரும் மறுக்க முடியாத அரியாதோர் அடிப்படையான பொது உண்மையைக் கண்டு தெளிந்துணர்ந்து உலகத்திற்கு உணர்த்துகிறது.

அதனாலேயே,

> ''வினைபோகமே ஒரு தேகம் கண்டாய் வினைதான் ஒழிந்தால்
> தினைப்போதளவும் நில்லாது கண்டாய்'' என்றும்,
> பேறு, இழவு, இன்பமொடு பிணி, மூப்பு, சாக்காடு என்னும்
> ஆறும் முன்கருவுட் பட்டது. அவ்விதி அனுபவத்தால்
> ஏறிடும் முன்பு செய்த கன்மம் மேலுடற் சேரு மென்றே''

என்றும் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது.

அரூபியான ஆண்டவன் தான் நினைத்த அருள் வடிவத்தை தானே எடுத்துக் கொள்வதின் விளக்கம்.

மேலும் இந்து மதத்தில் ஜீவராசிகள் அனைத்திற்கும், ஒவ்வொரு உருவத்தைக் கொடுக்கின்ற கடவுள் அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்து, தன்னருள் வெளிக்குள்ளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும் படிக்கு இச்சை வைத்து உயிர்க்குயிராய், மனம் வாக்கினுக் கெட்டாது நிற்கும் அரூபியாக இருந்தாலும், தான் நினைத்த அருள் வடிவத்தை தானே எடுத்து அடியார்களுக்கு காட்சி கொடுத்து அருள் புரிந்து வந்திருக்கிறார் என்றும் அவர் அப்படி எடுத்துக் கொண்ட அருள் வடிவங்களில் இன்னும் சிவலோகத்திலும், வைகுண்டத்திலும் அவரது அருளுக்கு பாத்திரமான பக்த கோடிகளுக்கும் காட்சி கொடுத்துக் கொண்டு வருகிறார் என்றும் இவ்வுலகிலுள்ள அனுபூதிமான்கள் எப்போதும் சொல்லி வந்திருக்கிறார்கள். அந்த திரு உருவங்கள் எல்லாம் அருள் உருவங்கள், மனிதர்களால் உண்டாக்கப்பட்டவையல்ல. அவை ஓவியங்களிலும், காவியங்களிலும் தீட்டப் பெற்று விக்ரகங்களாக அமைக்கப் பெற்று அதற்குரிய மூர்த்தி அதில் எழுந்தருளியிருக்கும்படி வேண்டப் பெற்றுப் பின் வழிபடப் பெற்று வருகின்றன.

# நமது விண்ணுலக வாழ்வும் மண்ணுலக வாழ்வும்

உயிர்க்குயிராய் இருக்கிறார் என்று சொல்லப் பெறுகின்ற பரம்பொருள், மேலுலகத்தில் பலவித உருவம் தாங்கியிருந்து நம்மை ஆட்சி புரிந்து வருகிறார் என்று சொல்கிறீர்களே! அது எவ்வாறு பொருந்தும்? என்று சிலர் கேட்கலாம். அவர்களெல்லாம் நாம் இப்பூவுலகில் பிறக்கும் முன் எங்கு இருந்தோம். இம் மண்ணுலகை நீத்த பின் எங்கே செல்லப் போகிறோம். நாம் நிரந்தரமாகவும், சுதந்திரமாகவும் வாழ்ந்து வந்த இடம் விண்ணுலகமே தவிர மண்ணுலகம் அல்ல என்பதை அறியாது அவ்வாறு கேட்கின்றனர். அவர்களுக்கு மண்ணுலகில் நடைபெறும் ஒரு உதாரணத்தால் அதைத் தெளிவு படுத்திவிடலாம்.

## *சிறைச்சாலையில் காணப்படும் வேற்றுமைகள் ஒரு நியாயத் தீர்ப்பினாலேயே ஏற்பட்டவை :*

ஒரு மாவட்டத்தில் உள்ள சிறைச்சாலையில் பல கைதிகள் பலதரப்பட்ட தண்டனைக்குள்ளாகி, பல ஊர்களிலிருந்து நியாயாதிபதிகள் செய்த தீர்ப்பின் பிரகாரம் தண்டனை அனுபவித்து கொண்டிருக்கிறார்கள் அல்லவா, அவர்களுக்குள் உணவுகளில் வேற்றுமையும் அங்கு விரும்பிய ஆகாரத்தை சாப்பிடவோ, விரும்பிய வேலைகளைச் செய்யவோ, கொடுத்த வேலையை செய்யாதிருக்கவோ, சிறைச்சாலையை விட்டு குறித்த நாளுக்கு முன்பே வெளியில் போகவோ அல்லது நிரந்தரமாய் எந்த நாளும் அங்கேயே வாழவோ முடியாது என்பது யாவரும் அறிந்ததே. அவ்வித தீர்ப்புகளுக்கு அவரவர் செய்த செயல்களே காரணம்.

அவர்களுக்கு எல்லோரையும் போல் மனம் போன போக்குப் படி நடக்க வேண்டும் என்ற விருப்பமிருந்தாலும், அவர்களுடைய சுதந்திரம் அவர்களிஷ்டத்திலில்லாமல் அவர்களை ஆண்டு வருகின்ற அரசாங்கத்தின் அதிகாரம் பெற்ற ஒரு நியாயாதிபதியின் நியாயத் தீர்ப்புக்கு உட்பட்டுத்தான் தொழில்பட வேண்டியதாயிருக்கிறது, என்பது யாவரும் அறிந்ததே சிறைச்சாலையில் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமான நிலையில் வாழும்படி ஏற்பட்டது. நீதி செலுத்தி

ஆண்டு வருகிற அரசாங்கத்தாரால் அவரவர் செய்த செயலைப் பொருத்து வழங்கப்பட்ட தீர்ப்பை பொருத்ததேயாகும். காரணமில்லாமல் யார் மீதும் கோபங்கொண்டோ நீதியுள்ள அரசாங்கம் யார்க்கும் தீர்ப்புக் கொடுப்பதில்லை என்பதையும் எல்லோரும் ஒப்புக்கொள்வர்.

சிறைச்சாலையில் வாழுகின்றவர்கள் அதற்கு முன் எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி சிறைச்சாலைக்கு வெளியே வாழ்ந்து இருந்தவர்களே அல்லாமல் வேறொருவர் அல்ல என்பது விளங்குகிறது அல்லவா.

### மண்ணுலகிலுள்ள வாழ்வுச் சிறைச்சாலை வாழ்வோடு ஒத்திருத்தல்

மேலே கண்ட உதாரணத்தை மனதில் நன்றாக வாங்கிக் கொண்டால் இப்பூலகில் வாழ்கின்ற நாம் நம்முடைய விருப்பப்படி பிறக்கவும், இருக்கவும், இம்மண்ணுலகிலுள்ள பாரமுள்ள ஊனுடலை விட்டு விண்ணுலகிற்கு செல்லவுமுடியாமலிருப்பதால் இம்மண்ணுலக வாழ்வே சிறைச்சாலையின் வாழ்வை ஒக்கும். என்பதை உணர்ந்து கொள்ளலாம். அதில் கொலையும், தற்கொலையும், உடலைச் சோதிப்பதே தவிர ஊனுடலில் எவ்விதச் சேதமுமின்றி ஆவி பிரிகின்ற சாதாரண சாவோடு ஒப்பிடக் கூடியதன்று. அது சிறைச் சாலையிலிருந்து விடுதலை பெற்றுப் போகுமுன் சிறைச்சாலை கட்டிடத்தைச் சேதம் செய்து, இடித்து வெளியேறின மூக்கரின் செயலோடு சேர்ந்ததாகும் அதற்குரிய தண்டனைக்குரியதாகவும் அமையும் என்று அறிந்திருத்தல் வேண்டும்.

## நமது சொந்த இடமும் வந்த இடமும்

மேலே சொன்னவற்றை நன்றாக புரிந்து கொண்டால் நாம் இதற்குமுன் சுதந்திரமாக வாழ்ந்திருந்தோம். என்பதும் அந்த வாழ்க்கை சிறைச்சாலையாகிய இப்பூலகிற்கு வெளியே விண்ணுலகில் தான் இருந்திருக்க வேண்டும், என்பதும் அவ்விண்ணுலகில் தான் ஆண்டவனது அரசாட்சியும் அவனது அதிகாரிகளும் இருக்க வேண்டும் என்பதும் அவர்களின் தீர்ப்பின்படி நாம் இப்பூவுலகச் சிறையில் வாழ வேண்டிய கால வரையறை முடிந்ததும் விண்ணுலகம் சென்று தான் வாழ வேண்டுமென்பதும் அங்குள்ள வாழ்க்கையே

நமது சுதந்திரமான நிரந்தரமான வாழ்க்கை என்பதும், அவ் விண்ணு-லகே நம்முடைய சொந்த உலகம் என்பதும் இம்மண்ணுலக வாழ்க்கை தற்காலிகமாக சுதந்திரமற்று வாழ வேண்டிய சிறைச்சாலை என்பதும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்கமாகி விடும். அதனாலேயே,

''அண்ணலே எனை ஆண்டு கொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந்தருள்புரிவேத நாயகனே
கண்ணினல் திருக்கயிலையிலிருந்த நின் கோலம்
நண்ணி நான் தொழ நயந்து அருள் புரியென பணிந்தார்''.

என சேக்கிழாரும்,

வந்த வரவை மறந்து மிக்க மாதர் தம் பொன் பூமி
மயக்கத்தில் ஆளும்
இந்தமயக்கை அறுக்க எனக்கு எந்தை மெஞ்ஞான எழில்வாள்
கொடுத்தான்.
சங்கர சங்கர சம்பு''.

என தாயுமானவர் அருளிச் செய்திருக்கிறார்கள்.

## வானுலக வாழ்க்கையில் நாட்டமும் தேட்டமும் அரும்புதல்

நமது பாரமுள்ள ஸ்தூல உடலை, குரம்பை என்று வள்ளுவரும் கூடு என்று ஒளவையாரும், புழுக் குரம்பை, குப்பாயம் என்று மணிவாசகரும் கனத்த சட்டை என்று கீசாத் சாரியாரும், யாக்கை, ஊனுடல் என்று கற்றவர்களும், பிணம், சவம் என்று மற்றவர்களும், சொல்லி வருவதையும் சிந்தனை செய்தல் வேண்டும். நான்கு பேர் தூக்க வேண்டிய ஒரு பாரமுள்ள கட்டையை சொப்பரத்தில் தொழில் படுகின்ற நம்முடைய உண்மையான உள் உடல் தூக்கித் திரிய வேண்-டியதிருக்கிறது என்பதை உணரும் போது தான் நம்முடைய சுதந்திர மற்ற நிலை நன்றாக புலனுகும். கள்ளமாட்டுக்கு அதன் துடுக்கையும், வேகத்தையும் அடக்கும் பொருட்டு ஒரு கட்டையை காலில் பிணைத் திருப்பது போல், நாமும் ஒரு கட்டைக்குள் போடப்பட்டு அதை தூக்கித் திரிகின்றோம். என்ற உண்மையும் புலப்படும். அப்பொழுது தான் நம்முடைய சுதந்திரமுள்ள நிரந்தரமான விண்ணுலக வாழ்வில் நமக்கு உண்மையான நாட்டமும், தேட்டமும் அரும்ப ஆரம்பிக்கும்.

# நடராஜனின் திருத்தாண்டவ நடனம்

முதலில் இறைவனின் ஐந்தொழில்களையும் உணர்த்துகின்றது. எம் பெருமானின் ஸ்வரூபங்களாகிய பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரம் சதாசிவன் ஆகியோரின் தொழில்கள் யாவும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளால், ஒருங்கே ஈசனின் திருநடனத்தில் அமைந்துள்ளன. எனவே நாம் இத்திரு நடனத்தை பஞ்சக்ருத்திய பரமானந்த தாண்டவம் எனக் குறிப்பிடு-கின்றோம்.

உடுக்கை தாங்கும் கை : படைத்தலையும்.
அபயஹஸ்தம் : காத்தலையும்.
அக்னி ஏந்திய கை : அழித்தலையும்.
தூக்கிய திருவடி : அருளினையும்.
முயலகன் மீது வைத்திருக்கும் திருவடி : மறைதலையும் உணர்த்துகின்றன.

திருமூலர் திருமந்திரத்தில் இதையே கூறுகின்றார்.

''அரண் துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரண் அங்கி தண்ணில் அறையிற் சங்கா ம்
அறனுற்றனைப்பில் அமரும் திரோதாயி
அரனடியென்றும் அனுக்கிரகம் என்னே''.

மேலும் உடுக்கை யொலி உலகின் ஒலிவடிவையும் தூக்கிய திருவடி அபேதானந்த முக்தியையும் குறிப்பிடுகின்றன. அபயஹஸ்தம் குருவின் வடிவத்தையும் உடுக்கையொலி பிரம்மவித்யா உபதேசத்தையும், அக்னிஹஸ்தம் அறியாமையாகிய இருள் விலகுவதையும் குஞ்சித பாதம் ஆத்ம ஞானத்தையும் பேரின்பத்தையும் வலியுறுத்துகின்றன.

மகுடாகமம், உண்மை, விளக்கம் போன்ற நூல்கள் பரமேச்வர திருநடனத்தில் 'ஓம் நமச்சிவாய' என்ற பிரணவ பஞ்சாரத்தையும், வடிவையும் கூறுகின்றன. திருவாசி ஓம் அக்னிஹஸ்தம் நகாரம் இரு திருவடிகள் மகாரம், வளைந்த கரம் = சிகாரம், உடுக்கை தூக்கும் கை = வகாரம், அபயஹஸ்தம் = யகாரம்.

மனவாசகங் கடந்த நாயனுர் இவ்வுண்மையை, உண்மை விளக்கத்தில் கூறுகின்றார்.

''எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி,
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநாட்டம்.
எங்கும் சிவமயமாய் இருத்தலால் எங்கெங்கும்.
தங்கும் சிவனருள் தன் விளையாட்டாதே''

## ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த சற்குரு சுவாமிகளைப் புகழ்ந்து அமலன் அடிகள் அவர்கள் இயற்றியப் பாடல்கள்.



### விநாயகர் விருத்தம்

1) ''நாதா கணபதி நீ நாதியெனைக் காத்தும்மைப்
போதன் புனித வருண் மோன குரு நீதனை யான்
நாடத் திருவருள் தா நன்மைக் குருவருட் காப்
பாட வருட் பாத்திர மூந்தா''.

### முருகன் விருத்தம்

2) ''அருவமும் உருவமாகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற ஜோதிப் பிழம்ப தோர் ஜீவனாகி
கருணை கூர்முகங்கள் ஆறும் கரங்கள் பணி நன்டுங் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்குதித் தனன் உலகமுய்ய''.

### சரஸ்வதி விருத்தம்

3) 'வெள்ளைக் கலையுடுத்தி வெள்ளைப் பணி பூண்டு
வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள் வெள்ளை
அரியாசனத்து மீது அரசரோ செம்மைச்
சரியாசனத்து வைத்தாய்''.

4) ''துய்பன் சுக மௌன சூட்சுமனைப் பாடிட உன்
மெய்யா விமல வருட் ஜோதி உன் துய்ய மலர்
சேவடியை போற்றுகின்றேன் சேர்ந்தருளி ஆசுகவி
பாவடி யேற் கீந்துட் கண்பார்''.

### ஸ்ரீ மௌனானந்தர் விருத்தம்



5) எட்டாத இன்பமே கட்டாயமுண்டிட எங்கள் குருபாத மலரை
தொட்டேனே யன்புடனுற் றேனே நின்பதம் சொந்தமாய் என்றும் வாழ
பெற்றேனே குருபதந் தாள் போற்றி நின்று யான் பிரிய முடன்
உற்றேனே பிரணவ மௌனனந்தரை யோது வனே.

6) ஓதுவனோ நின்னை உலகெலாம் நின்ற ஓரெழுத்தால்
தீதிலா தென் மணம் மோன மாங்குருவடி தேடி நிதம்
பாதியாம் புரைவிழி பதுமாசன மதில் பிரியமுடன்
ஆதியாய் நின்ற குரு மௌனானந்தர் பதமறிகுவனே.

7) மங்களமே தரல் வேண்டும் மறுநிலையும் வறுமையது மடிதல் வேண்டும்.
சங்கையெலா மறல் வேண்டும் சாந்தி யொழி யுறல் வேண்டும் சக்தி தாயை
கஞ்குலிலும் பகல்தனிலுங் கண்டிருக்கக் கருணை செயல் வேண்டும் கண்டாய்.
துங்க வருட்ஜோதி யொரு துரிய நிலை தோய்ந்த சிவ மௌனத் தேவே.

8) கங்கை யொரு திங்கடனை கொண்டானை கண்ட வரும் கருணை நாதா.
எங்களருள் மன்னவனே துங்க வருட் பொன்னொளியாயிலாங்கு மேனி
இங்கருளிப் பங்க மறுத் தெல்லாஞ் செய் வல்லமையு மீதல் வேண்டும்.
மங்கள நற்புங்கவனே மன்றதனில் ஒன்றிய என் மவுன தேவே.

9) பொன்னம்பலத் தாடும் பூசுரனைக் கண்ட வருள் புனித மௌன
மன்னவனே மாதாவின் திருவருளை வந்தடைய வழுத்துகின்றேன்.
உன்னருளால் உண்மை நெறி யோக லயத் தோர மனத்தை யாக் கண்ணும்
என்னுள்ளத்தே எழுநிலத்தப் பாலுள்ள இறையொளி தோன்ற செய்வாயே.

10) குருநாதனே எங்கள் குழுமுழுது முய்ய வோர் கோலங்கொண்டு
வருநாதனே இங்கு வாழ்பவர் யாருக்கு மோர் வாசகமே
தருநாதனே யிந்தத் தாரணியில் யாவு மாயத் தழைத்து நின்ற
ஒருநாதனே இங்கு நின்னையல்லாமல் வேறொரு வருண்டோ மவுன தேவனே.

11) ஒருவருண்டோ வுனைப் போல வப்பா எந்தனுளத்த முற்றே
பொருளளந்தாய் பின்ன ரெங்குமே நீயாய் பொருந்தி நின்றாய்
குருபரா நின்னை நீ காட்டித் தந்தாய் நடுக்குறி யதனில்
தெரிபவர் நீயல்லால் வேறுமுண்டோ மௌன தேவே.

12) தானன்றி ஒன்று மில்லை யென்று நீ உரைத்திட்ட தனிப் பொருளே
ஊனென்ற நாயேனுமொரு பொருளாகவே உருவெடுத்து
நீ நின்ற இடத்தையே நினைத்து யான் நெகிழ்ந்துருகி
தானின்று விட்டேனு னெத்தனை காலமோ மௌன தேவே.

13) காண்பதற்கே ஒரு சொப்பனத்துங் கிடைக்காதவுனை
பூண்பதற்கே மிக ஆசை கொண்டேனிந்தப் பூமிதனிலே
நான் செனித் தேவுனைக் காண்பேனெனச் சொன்ன நல்லமொழி
வீண் படுத்தாமலே நடப்பதற் கருள்வாய் வித்தகா மவுனதேவே.

14) நடப்பதற்கே மிகச் சற்றுங்கல்லாத யிந்த நாயினையும்
விருப்பத்திற்கே என்னுள் தோற்றி நின்றாய் யுந்தன் வீடதனில்
கிடைப்பதற்கே யருளூட்டி வைத்தாய் என்னுள் கிடந்த மனம்
கட்டப்பதற்கே வழி வைக்கின்றதையே நின் கருணை நன்றே மவுனதேவே.

15) அவனியிலே யிந்த நாயையு மோர் பொருளாய் மதித்தே
தவநிலை காட்டிய சற்குருவே நின்னைச் சார்வதற்கே
யுவநிலை வாய்த்து முள்ளப் போதே முயலாது மூன்று விட்டால்
எவர்நிலை எப்படியாமோ பின் யார் இசைப்பவரோ மவுனதேவே.

16) பண்புகளுக் கெல்லாம் இருப்பிடமாகிய பண்ணவனே
பண்புகளினுலோர் உருவெடுத்தே யிந்தப் பார்வந்தையோ
பண்புகள் தாமிங்கு வந்த பின்பே படைத்திட்டனையோ
பண்புகள் யாவருக்கும் எப்பொழுதுமாய் நின்று படிப்பிக் கின்றதே மவுனதேவே.

17) ஈயுங்களுங்கள் உடல் பொருளாவி யென்றே எழுந்து
போ யெங்கு மாட் கொளும் புண்ணிய பாத பொடிகளுக்கே
தோயுங்கள் மேனி உருகுங்காளுள்ளம் என் தோழர்களே
வாயெங்கு மாகி வழுத்துங்கள் போ முங்கள் மாய் கைகளே

18) உள்ளங்களெல்லாம் உருகி நின்றாடிய உள்ளன்பிலே
கள்ளங்க ளொன்று மறியாத நாதன் கருணை யெனும்
வெள்ளங்கள் தோன்றி கரை புரண்டோடி வித விதமாய்
பள்ளங்கள் மேடுக ளெல்லா மொன்னுக்கி பறந்திட்டதே மவுன தேவே.

19) புத்தூரில் சென் மித்து பெருமாள் நகர்பதியில் புனித மவுன
அத்துவித நிலை நின்றுட் பதியோடைக்கியமாகி ஆனத்திக்கும்
சித்த பரமானந்த சிவ மவுன குருவே என்றைய் யாக் கன்று
பத்தியுடன் பணிந்தே னென் பலவினை போக்கிடுவாய் மவுனதேவே

20) ஓங்கு குண்டலி சக்தி கனல் கொண்டு வாசியை உள்ளடக்கியு துறவியனாய்
பாங்கான அறிவுமய மாயுள்ள ஜோதியை பார்த்திட்ட தெய்வ பிறவியனாய்
ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனை எரித்துமே அமலயோகியனாய்
தூங்காமல் தூங்கியே துரிய நிலைதனில் தோய்ந்திட்ட மவுனதேவே

21) பாசமெல்லாம் நீராக்கி பதிநிலையே பாசமென்ற பாசங்கொண்டு
வாசமெல்லா மவுன நிலை மணிமன்றத் துள்ளேணவே வயங்கும் நாதா
தூசு மனம் சுட்டிறந்த சூட்சுமத்தை கண்டிடலை வேண்டுகின்றேன்
நேசமுளாய் நிருவிகற்ப நிஷ்ட நிலை நித்திய மெஞ்ஞான வாழ்வே

22) சாத்திரத்தை வாசித்தென் சலனமல்லால் சாந்தியில்லை அந்தோ மைந்தன்
சூத்திரத்துட்சுக மோனநிலை நிற்கும் சூட்சுமத்தை கண்டிடலை வேண்டுகிறேன்
ஆத்திரமே கொண்டலையு மெம்புலனை அடக்கி ஒளிகாணல் வேண்டும்
க்ஷேத்திரப் பெருமாள் நகரில் சிவத்துடன் கலந்திட்ட தேவே.

23) நிருத்தனை நிமலனை நீற்றனை நெற்றிக்கண்ணனை நேரினில் கண்டறிந்தாயான்
ஒருத்தனே உன்னை ஓல மிட்டலரி உலகெலாந் தேடியுங் காணேன்
திருக்கமாம் துருசுமலை இருள் சூழ்ந்த உசிலை வன மேவிய சீ
ரருத்தனே யடியேனு தரித் தழைத் தேன் அருள் தருவாய் மவுனத்தேவே.

24) கல்லாத ஊரதனில் ஞானத்தை கற்பித்த மவுன நாதா
பொல்லாத பிழைக ளெல்லாஞ் செய்திடினும் புத்திரனையாக்
கன்னுன்னை
சொல்லாலே துடித்திடலால் துன்ப மறல் வேண்டு மிருள்
தொலைதல் வேண்டும்
வல்லவருட் கொற்றவனே மா மவுன தேசிகனே வல்லற்றேவே.

25) வள்ளல் இராமலிங்க அடிகள் வாய் விட்டுரைத்த மொழி
தெள்ளுலகில் சீர்பெறவே செப்பி வந்தாய் மௌன தேவே
கள்ளமில்லாத் தேவர் கொழுந்தே காருண்ய மிகுங்கற்பகத்தின்
உள்ள மதிப்பு குந்துண்மை நிலையை உலகோர்க்கருளிய
தேவதேவே.

26) கண்ணே கனிச்சாறே கற்பகமே காருண்யமே
பண்ணே பழந்தமிழே பாண்டியன் பரம்பரையே
முன்னேற்றப் பாதை காட்டி மும் மலத்தை வென்றவனே
அன்னுய் உன்னையல்லால் எனக்கார் துணை ஆர் உறவே.

27) முத்தம்மையின் புதல்வா முக்குலத்திலுதித் தவனே
இத் தரையோர் ஏங்கியழ எங்குரைந்தாய் சித்தர் போல்
புத்தர் இருப்பிடம் நாடிப் போயினையோ யாமறியோம்
அத்தர உன்னையன்றி எனக்கார் துணை செப்புவாயே,

28) அன்னையினு மதிகமெனை யருள் புரிந்தாட்கொண்ட மௌன நாதா
முன்னையினு மதிக முளே மோன வெளி முச் சந்தி சாரவென்றும்
பின்னொடு முன் தெரியா வைய்யாக் கண்ணும் பேதை யெனை
ஜோதி காணும்
நன்னயத்தில் வைத்திடுதல் மௌன குரு நாதா உன் கடன தாமே

---

1) "ஆதி ஓம் பிரணவமாய் நின்ற சூத்திரத் தானந்த மான குருவே
ஐந்தாகி எட்டுடனே ஐம்பத்தோட்சரமாய் அகிலபுவளங்களேழாய்
ஓதுபதமென்பத்தி ஒன்றாக நின்று இருநூற்று இருபத்தி நான்காய்
ஓலமிடும் புவன்மிசை சப்த கோடிகளெனும் ஓங்கார மந்திரப்
பொருளாய்

ஜோதிமயமான பலதனு காணயுவன மெனுஞ் சொல்லொனு ஞான
வெளியில்
சாதகமாய் செய்யு மடியாருக்கு சாயு க்ஷயமெனுஞ் சாம்ப சிவ
மூர்த்தி வடிவாய்
நீதமுடன் மான் மழுதரித்த சிவரூபமே நீடுழியான பரமே
மானிலந்தன்னில் விஞ்ஞானமாய் நின்ற சிவமௌனனந்தர்குருவே

2) பஞ்ச பூதங்களோடுகூடியான்பட்ட குறைபார்தனிலே மெத்தவுண்டு
பாழான சென்மமிது ஓயாமல் மாய்கையில் பற்றியான் நித்தம்
நித்தம்
சஞ்சலப் படுகுழியில் அனுதினம் விழுந்ததுமே சந்தோஷமென
எழுந்து
சத்திய நிலையறியாது மூர்க்கருடனே கூடி சஞ்சலத்திற்காளானேன்
யான்
கொஞ்சமாகிலு முனக்கு அஞ்சலி செய்யாது குவலயம் வாழ்ந்தி
ருந்தேன்.
குருவாக வந்தெனக்கு யர் ஞான விஞ்சை யதை கோர்த்து என்
மனதிலாழ்த்தி
நெஞ்சமதி லாங்கார பொக்கிஷந்தனையும் நிவர்த்தி செய்தருளை
யீன்ற
மானிலந் தன்னில் மெஞ்ஞானமாய் நின்ற புத்தூர் மவுனானந்த
குருவே.

3, இல்லம் தனை மறந் துன்னடியை நம்பியான் ஏங்கித் தவித்து வாழ
எண்ணாதும் எண்ணியே என் மனம் புண்ணாகி ஏங்குதே என்ன
செய்வேன்
துள்ளுமறியா மனது எத்தனை மா கொடுமை செய்ததோ யாது
மறியேன்
துடர்பவ மின்றியே வாழ்ந்திட உபாயமுஞ் செய்தெனக் கருளு
மீய்ந்து
வல்ல சிவ மூர்த்தியே வந்தெனது வஞ்ச வினையகற்றியே விஞ்சை
தன்னை
வாசியுட னொன்றாக்கி நேசித்தறிந்திட வழிதனை காட்டி என்னுள்
நல்லதொருஜோதியாய் நின்பா வெளியிலே நீடூழியாக்கி வைத்தாய்
மானிலந் தன்னில் மெஞ்ஞானமாய் நின்ற புத்தூர் மௌனானந்தர்
குருவே

4) வம்பருடன் கூடாது சஞ்சாரஞ் செய்து யான் வாசியெனுங்கற்ப
மதுவை
மாருது எப்பொழுதும் ஓயா துண்டிட மவுன மது தந்து நின்றன்
தொண்டனென ந்தெனதுள் நின்ற தொருமாய் கையை
துடராமலே விரட்டி
தொல்லையனு வில்லாது இலை சருகு காய் கனிகள் தின்று யானின்
பமுறவே
நின்று உந்தனைக் காண கண்மூடி மவுனியாய் நிறைந்த பரி-
பூரணத்தில்
நீங்காது என்றுமே தாண்டவம் செய்திட நினைத்தறியாத துண்டோ
நான்முகன் மாலுமொரு தேவர் தினம் போற்றும் நாதாந்த
முத்திமுதலே
மானிலந் தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மவுனனந்தர்
குருவே.

5) மாதா வயிற்றினில் ஊனய் தரித்து யான் மாய்கை எனும்
புவியின் மீது
மாருது எப்பொழுதும் ஓயாது துன்பமடதாதருடன் சேர்ந்து முலகில்
மாதவ மெனு வழியை ஓதா மலனு தினமும் மடையனய் நான
கழித்தேன்
மலரடியை தேடியே தினமருளை நாடினேன் மன கவலை தீருமானே
வேதாந்த சின்மய நாதாந்த ஜோதியே வேறு துணை ஒன்று
மறியேன்
வித்தகராய் நின்று சிவமுததருக்கு விஞ்சையதை ஓதி வைத்
தன்பு கூர்ந்து
நாத மணி ஓசையுடன் பால முர்த முண்டிட நாடினே னெந்தனைக்
கார்
மானிலந் தன்னில் மெஞ்ஞானமாய் நின்ற புத்தூர் மௌனனந்தர்
குருவே

6) என் அன்னை என் தந்தை என் பிள்ளை என் சுற்ற மென்றுறைக்
கின்ற பொய்யும்
என் இல்லம் என் பூமி என் ஆடு என் மாடு என்றுறைக்கின்ற
பொய்யும்
தன் மேனி தன்னுடல் தன்னிலை தன்னுயிர் தானதும்சொந்தமில்லை
சண்டாளமாய்களவு வஞ்சகம் பேசுவது தன் புத்தி தோன்றவில்லை
இன்னபடி இன்ன நான் இன்னபடி வருகு மென்றென்னாத
மூட வார்த்தை

ஈசனேயாவு முன் செயலெனவே நின்றிடஎன்னுள் குருவாக நின்று
நின்னருளைப் பெற்றிடவும் வந்தெனதினுள்ளமே நின்ற தொரு
தன்மையறிவேன்
மானிலந் தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மௌனனந்தர்
குருவே.

7) துறவியாய் சென்றெனது குரவரும் பாத மலர் துணையடி
யென்றறிவினாலே
தொண்டு செய்தே யுனது சித்ராசனப் புலிமான் தோலுடனே
தெற்வை வஸ்திரம்
பிறவியனத்தத் தீரத்தினம் உத்திர திசையிலே பரம பத்மா
சனத்தில்
பிரிய மாயனு தினமும் மோர்ந்து சின் முத்திரை பொருந்தியே
மவுனமாக
திரமுடனே சித்ர பதுமைய தாய் நின்றெனது திரை எனுஞ்
சலிப்பகற்றி
தேவரொடு முனிவர் தொழும் சிவயோக நிஷ்டையில் தேறியானே
-ரெழுத்தை
நேரதனில் கண்டுமே ஓதித் துதிக்க வேணு நேர்மை நீயறியாததோ
மானிலந் தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மவுனனந்தர்
குருவே.

8) பூவுலகிலுந்தனை யான் ஓதித் துதிக்காமல் புலையனுய் அவதரித்து
பொன் சிவிகை தங்க நகை மங்கையர் தமக்குமே போட்டழகு
பார்த்து நித்தம்
மாவுலகில் பல்லக்கு கட்டிலுடன் மெத்தையுமானதொரு வண்டி
குதிரை
மாத மொன்றுக்குமே ஒட்டிக்கு ரெட்டியாய் மாலாவ வட்டி வாங்கி
பாவுலகில் ஏழையது பசியால் வருந்திடப் பொருளதனைச் சேர்த்து
வைத்து
பாஷை பதினெட்டு மவன் வாசகமாய்கற்றுமெவர் பாரில் நிகரில்லை
என்று
நாவதனில் கூறிடு மாபாவியா னேர்கள் நாதன் அருள் காண்ப-
தெங்கே
மானிலந் தன்னில் மெஞ்ஞானமாய் நின்ற புத்தூர் மௌனானந்த
குருவே.

9) எவ்விதமாக உன் தன் பாதம் காண்போ மென்றேங்கியே வாடி நொந்தேன்
இன்றைக்கு உண்பதுவும் நாளைக்கு உண்பது மிதுவே தெரியாமலும்
முவ்வேளை அன்னம் புசித்து யான் மாய்கையில் மூழ்கியே தானிருந்தால்
மோனகுரு நாதனே உன் பாத மதனை மோர்ந்தறிவ தெக்காலம் யான்
சிவ்வெனும் பொருளதில் உவ்வகை கோர்த்துமே சந்தோஷ-மாயிருந்து
சிவசிவா உன்பாதம் தஞ்சமென நம்பினேன் சீக்கிரமென்னை யாள்வாய்
நவ்வுடன் மவ்வுதாய் நின்ற தோர் மாய்கையை நாடிடார்கே பொருளே
மானிலந்தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மவுனானந்தர் குருவே.

10) கர்ம மெனுஞ் சஞ்சிதமாய் வந்த வினை தலையெ லாங் கருத்-தெனும் அறிவினாலே
கங்குல் பகலற்ற சிவ விஞ்சை யெனும் வாளினல் களைந்து நிர்த்தூளி பண்ணி
வர்லமெனு வைராக்கிய மழுவு கொண்டுழுது யான் வளருமன வெகுளி களையை
விஞ்சப் பிடுங்கி வேர றப்பரம்பாக்கி வேதமெனும் நால் வரப்பையும்
தர்மமெனும் மண்வெட்டி கொண்டு யான் கட்டியதை தர்க்கா வாமடையடைத்து
சம்பு சங்கர சாதாசிவம் எனும் வித்திட்டு சாந்த பதமாய் வளர்த்து
நர்மனதாகவே பக்குவங்கண்டு யான் நாதன் அருள் உண்க வைப்பாய்
மானிலந்தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மவுனனந்தர் குருவே.

11) வற்றுத செல்வமது பெற்ற தாய் புவன மதில் வாழ்ந்திருப்பவனெரு பதர்
வஞ்சியுடன் கொஞ்சி விளையாடியே அனுதினம் வாழ்கின்ற வானொரு பதர்
சுற்றத்தாருடன் உறவு கொள்ளாது என்றுமே சுகித்திருப்பவனெரு பதர்

சொந்த மாயுள்ளோரை மதியாமல் பேசிடுஞ் சண்டாளனொரு
பதர்
எத்தனையோ புத்திகள் சொல்லியும் கேளாதிருக்கின்ற வனொரு
பதர்
ஏழைகளை இம்சித்து தான் வாழ என்றுமே என்னுகின்றவனொரு
பதர்
நித்தனே என்னுள்ளம் பேத மற நின்று நீ நிறைந்த அறிவாக
வருவா
மானிலந்தன்னில் மெஞ்ஞானமாய் நின்ற புத்தூர் மவுனானந்தர்
குருவே.

12) ஆதியாம் நவகோடி நாதர்கள் வாழ்ந்திடும் அழகு மிகு சிறு
மலையின்
ஆக இருள் போக்கிய துருசுமலை யீன்ற பெருமாள் நகர் மேல்
ஜோதிமயமாகவே சக்ஷி தானந்த மெனும் சுடர் வடிவ ரூபமாகி
சொற் பொருட் கெட்டாத சிற்றம் பலத்திலே தோய்ந்தவர்
கமூதமீய
நீதமுடன் தந்த குரு நாதனருள் பொற் பாத நினைந்து தின
மன்பு கூர்ந்து
நிக்ஷயித்த சன் மார்க்கன் வி.அ. கண்ணு அடிகள் நிகழ்ச்சினேனி
தனையுற்றோர்
நாதனருள் பெறுவது நிச்சயம் நான் கூறவில்லை யிதனை
மானிலந் தன்னில் மெஞ்ஞான மாய் நின்ற புத்தூர் மௌனனந்தர்
குருவே.



தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

ஸ்ரீலஸ்ரீ மௌனானந்த சற்குரு சுவாமிகள்
மடாலயம்
பெருமாள்பட்டி,
வாடிப்பட்டி - அஞ்சல்
மதுரை மாவட்டம் - 624 218.

## ஸ்ரீலஸ்ரீ மௌனகுருநாத சுவாமிகள் திவ்ய சரிதம் புத்தக வடிவில் வெளிவர நிதி உதவிய அன்பர்கள் விபரம்

| எண் | | அன்பர்கள் | ரூ. |
|---|---|---|---|
| 1) | திரு. | வி. அய்யாக்கண்ணு என்ற அமலன் அடிகள் | 501 |
| 2) | ,, | ராம. சிவஞானம் பிள்ளை மானுமதுரை | 1001 |
| 3) | ,, | சிவ. பத்மனுபன், ராசி மியூசிகல்ஸ் மானுமதுரை | 1001 |
| 4) | ,, | அ. ஆறுமுகசுவாமி<br>ஸ்ரீ மௌன குருநாத சுவாமிகளின் தொண்டன்<br>பெருமாள் பட்டி | 501 |
| 5) | ,, | ரெத்தினசாமி, ஸ்ரீ வல்லபகணபதி கோவில் பூசாரி<br>T. வாடிப்பட்டி | 108 |
| 6) | ,, | மு. காமாக்ஷி S/o முத்துக்குமார் சேர்வை<br>அருள்மிகு மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் தொண்டன்<br>இராம நாயக்கன் பட்டி - வாடிப்பட்டி (P.O) | 101 |
| 7) | ,, | ஏடு. இராதா கிருட்டினன், ஆசிரியர்<br>பாண்டியராஜபுரம் - T. வாடிப்பட்டி | 251 |
| 8) | ,, | S.K. நடராஜன்<br>(ஓய்வு) மதுரை சர்க்கரை ஆலை நிர்வாக அலுவலர்<br>மேட்டுப் பெருமாள் நகர் - வாடிப்பட்டி | 101 |
| 9) | ,, | பாண்டித்துரை S/o பெரியண்ணன்<br>பெருமாள் பட்டி | 51 |
| 10) | ,, | S. சேகர் S/o சுப்ரமணிய பிள்ளை<br>குரங்குத்தோப்பு | 51 |
| 11) | ,, | P. கோபாலகிருஷ்ணன்<br>S/o பெரியசாமி சேர்வை<br>பெருமாள் பட்டி | 51 |
| 12) | ,, | L. இளங்கோவன்<br>பாண்டியராஜபுரம் ஆசிரியர் - T. வாடிப்பட்டி | 51 |
| 13) | ,, | P. மகாலிங்கக்கண்ணன்<br>பாண்டியாராஜபுரம் ஆசிரியர் - T. வாடிப்பட்டி | 51 |
| 14) | ,, | ஆ. பாண்டியன் (LIC) பள்ளபட்டி | 51 |
| 15) | ,, | நாராயணசுவாமி<br>பாண்டியராஜபுரம் ஆசிரியர், T. வாடிப்பட்டி | 51 |

16) ,, N. பிரேம் சுந்தர் பாண்டியராஜபுரம் 51

17) ,, V. காசி S/o விருமாண்டித்தேவர் 51
பெருமாள் பட்டி

18) ,, ராமு S/o அரியணத் தேவர் பெருமாள்பட்டி 51

19) ,, S. வெங்கிடாசலபதி செல்லூர் மதுரை-2

20) ,, பெ. முத்தையா, துணைத் தாசில்தார் 101
திருமதி. மு. கல்யாணி
திரு. மு. கணேஷ்குமார் (B.E)
,, மு. செந்தில்குமார் (B.E)
97/22 நாகூர்ஆண்டவர் காலனி
பாலம் ஸ்டேஷன் ரோடு செல்லூர் மதுரை - 2

21) ,, R. ஆறுமுகம் Asst Sub Inspector (CRPF) 51
பெருமாள் பட்டி

22) ,, T. இராஜேந்திரன் B.Sc., M.A.B.L., 51
விநாயகா ஹோம் நீட்ஸ் - T. வாடிப்பட்டி

23) ,, M.P. மகாலிங்கம் செல்வக்குளம் 101

24) ,, ச. தவமணி 51
பாண்டியராஜபுரம் ஆசிரியர் உசிலை

25) ,, P. பெரியணன் 101
227-A மகிழ்சி:127-A மதுரை ரெடிமேட் ஷோரும்
நேதாஜி ரோடு மதுரை

26) திரு. ச. திருமூலன் 51
பாண்டியராஜபுரம் ஆசிரியர்
நீரேத்தான் வாடிப்பட்டி

27) ,, S. சுப்ரமணியன் பாண்டியராஜபுரம் ஆசிரியர் 51
குமார்பவனம் வல்லபகணபதி நகர்,
T. வாடிப்பட்டி

28) ,, தாமோதரன் & குணசேகரன், 56
கோகுலம் ஜுவல்லர்ஸ்,
கான்சா மேட்டுத்தெரு, மதுரை

29) ,, A. ஷண்முகவேல் பெருமாவ்பட்டி 51

30) ,, C. ஜெகதீசன் M.Com. B.E.D. 51
பெருமாள் பட்டி

31) ,, S. நாகராஜன் P.E.T., 51
பாண்டியராஜபுரம் மேல்நிலைப்பள்ளி
பாண்டியராஜபுரம்

## பிழைத் திருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| அணிந்துரைப்பாமாலை | குருதாதன் | குருநாதன் |
| என் அனுபவம் | சாது சஞ்கிலி | சாது சங்கிலி |
| 6 | கைப்பிறத்திலேந்தி | கைப்புறத்திலேந்தி |
| 11 | நாருயணம் | நாராயணம் |
| 11 | நாரயணனுக்கு | நாராயணனுக்கு |
| 17 | சத்தி | சக்தி |
| 23 | சூழ்ந்திருந்து | சூழ்ந்திருந்தது |
| 26 | புசிப்பதில் | புசிப்பதில்லை |
| 26 | உத்தரவு | உத்தர |
| 27 | எனறு | என்று |
| 29 | உரிண்டை | உருண்டை |
| 31 | அழைத்தும் | அமைத்தும் |
| 32 | தங்குயிருந்தாலும் | தங்கியிருந்தாலும் |
| 33 | பிரயாணமானர்கள் | பிரயாணமானார்கள் |
| 34 | ருருநாதன் | குருநாதன் |
| 36 | சூடன் | சூடம் |
| 36 | ஆருறாவது | ஆறாவது |
| 36 | மாடலயமும் | மடாலயம் |
| 39 | குருதாதன் | குருநாதன் |
| 40 | ஒரு | ஒருவர் |
| 43 | மாடலயம் | மடாலயம் |
| 44 | பிரம்ப | பிரம்ம |
| 51 | முக்கோணமாயிப்பது | முக்கோணமாயிருப்பது |
| 54 | துலியம் | துரியம் |
| 54 | துரியதீதம் | துரியாதீதம் |